# COPYRIGHT STATEMENT

Bibliographic Record Target

*தனவைசிய ஊழியன். -- மலர் 1, இதழ் 1 (Sept. 8, 1920)- . --*
*காரைக்குடி : [சொ. முருகப்பசெட்டியார்], 1920-*
*v. : col. ill. ; 28-43 cm.*
*Weekly.*
*In Tamil.*
*Editor: சொ. முருகப்பசெட்டியார்*
*Continued by: ஊழியன்*
*Record No. 148*

*Tan̲avaiciya ūḻiyan̲. -- Malar 1, itaḻ 1 (Sept. 8, 1920)- . --*
*Kāraikkuṭi : [Co. Murukappaceṭṭiyār], 1920-*
*v. : col. ill. ; 28-43 cm.*
*Weekly.*
*In Tamil.*
*Editor: Co. Murukappaceṭṭiyār*
*Continued by: Ūḻiyan̲*
*Record No. 148*

35 mm microfilm

Image placement: IA (IIA) IB IIB

Date filming began: 21 April, 2009

# List of issues filmed

## தனவைசிய ஊழியன்

*மலர் 5, இதழ் 21 (Feb. 10, 1925)*
*மலர் 5, இதழ் 22 (Feb. 17, 1925)*
*மலர் 5, இதழ் 23 (Feb. 24, 1925)*
*மலர் 5, இதழ் 24 (Mar. 03, 1925)*
*மலர் 5, இதழ் 25 (Mar. 10, 1925)*
*மலர் 5, இதழ் 26 (Mar. 17, 1925)*
*மலர் 5, இதழ் 27 (Mar. 24, 1925)*
*மலர் 5, இதழ் 28 (Mar. 31, 1925)*
*மலர் 5, இதழ் 29 (Apr. 07, 1925)*
*மலர் 5, இதழ் 30 (Apr. 14, 1925)*
*மலர் 5, இதழ் 31 (Apr. 21, 1925)*
*மலர் 5, இதழ் 32 (Apr. 28, 1925)*
*மலர் 5, இதழ் 33 (May 05, 1925)*
*மலர் 5, இதழ் 34 (May 12, 1925)*
*மலர் 5, இதழ் 35 (May 19, 1925)*
*மலர் 5, இதழ் 36 (May 26, 1925)*

*Continued ...*

மலர் 5, இதழ் 37 (June 02, 1925)
மலர் 5, இதழ் 38 (June 09, 1925)
மலர் 5, இதழ் 39 (June 16, 1925)
மலர் 5, இதழ் 40 (June 23, 1925)
மலர் 5, இதழ் 41 (June 30, 1925)

**ஊழியன்**

மலர் 5, இதழ் 43 (July 14, 1925)
மலர் 5, இதழ் 44 (July 21, 1925)
மலர் 5, இதழ் 45 (July 28, 1925)
மலர் 5, இதழ் 46 (Aug. 04, 1925)
மலர் 5, இதழ் 47 (Aug. 11, 1925)
மலர் 5, இதழ் 48 (Aug. 18, 1925)
மலர் 5, இதழ் 49 (Aug. 25, 1925)
மலர் 5, இதழ் 50 (Sept. 01, 1925)
மலர் 6, இதழ் 1 (Sept. 08, 1925)
மலர் 6, இதழ் 2 (Sept. 15, 1925)
மலர் 6, இதழ் 3 (Sept. 22, 1925)
மலர் 6, இதழ் 4 (Sept. 29, 1925)

Continued ...

மலர் 6, இதழ் 5 (Oct. 06, 1925)
மலர் 6, இதழ் 6 (Oct. 13, 1925)
மலர் 6, இதழ் 7 (Oct. 20, 1925)
மலர் 6, இதழ் 8 (Oct. 27, 1925)
மலர் 6, இதழ் 9 (Nov. 03, 1925)
மலர் 6, இதழ் 10 (Nov. 10, 1925)
மலர் 6, இதழ் 11 (Nov. 17, 1925)
மலர் 6, இதழ் 12 (Nov. 24, 1925)
மலர் 6, இதழ் 13 (Dec. 01, 1925)
மலர் 6, இதழ் 14 (Dec. 08, 1925)
மலர் 6, இதழ் 15 (Dec. 15, 1925)
மலர் 6, இதழ் 16 (Dec. 22, 1925)
மலர் 6, இதழ் 17 (Dec. 29, 1925)
மலர் 6, இதழ் 18 (Jan. 05, 1926)
மலர் 6, இதழ் 19 (Jan. 12, 1926)
மலர் 6, இதழ் 20 (Jan. 19, 1926)
மலர் 6, இதழ் 21 (Jan. 26, 1926)
மலர் 6, இதழ் 22 (Feb. 02, 1926)
மலர் 6, இதழ் 23 (Feb. 09, 1926)

*Continued ...*

*மலர் 6, இதழ் 24 (Feb. 16, 1926)*
*மலர் 6, இதழ் 25 (Feb. 23, 1926)*
*மலர் 6, இதழ் 26 (Mar. 02, 1926)*
*மலர் 6, இதழ் 27 (Mar. 09, 1926)*
*மலர் 6, இதழ் 28 (Mar. 16, 1926)*
*மலர் 6, இதழ் 29 (Mar. 23, 1926)*
*மலர் 6, இதழ் 30 (Mar. 30, 1926)*
*மலர் 6, இதழ் 31 (Apr. 06, 1926)*
*மலர் 6, இதழ் 32 (Apr. 13, 1926)*
*மலர் 6, இதழ் 33 (Apr. 20, 1926)*
*மலர் 6, இதழ் 34 (Apr. 27, 1926)*
*மலர் 6, இதழ் 35 (May 04, 1926)*
*மலர் 6, இதழ் 36 (May 11, 1926)*
*மலர் 6, இதழ் 37 (May 18, 1926)*
*மலர் 6, இதழ் 38 (May 25, 1926)*
*மலர் 6, இதழ் 39 (June 01, 1926)*
*மலர் 6, இதழ் 40 (June 08, 1926)*
*மலர் 6, இதழ் 41 (June 15, 1926)*
*மலர் 6, இதழ் 42 (June 22, 1926)*

*Continued ...*

மலர் 6, இதழ் 43 (June 29, 1926)
மலர் 6, இதழ் 44 (July 06, 1926)
மலர் 6, இதழ் 45 (July 13, 1926)
மலர் 6, இதழ் 46 (July 20, 1926)
மலர் 6, இதழ் 47 (July 27, 1926)
மலர் 6, இதழ் 48 (Aug. 03, 1926)
மலர் 6, இதழ் 49 (Aug. 10, 1926)
மலர் 6, இதழ் 50 (Aug. 17, 1926)
மலர் 6, இதழ் 51 (Aug. 24, 1926)
மலர் 6, இதழ் 52 (Aug. 31, 1926)
மலர் 6, இதழ் 53 (Sept. 07, 1926)
மலர் 7, இதழ் 1 (Sept. 14, 1926)
மலர் 7, இதழ் 2 (Sept. 21, 1926)
மலர் 7, இதழ் 3 (Sept. 28, 1926)
மலர் 7, இதழ் 4 (Oct. 05, 1926)
மலர் 7, இதழ் 5 (Oct. 12, 1926)
மலர் 7, இதழ் 6 (Oct. 19, 1926)
மலர் 7, இதழ் 7 (Oct. 26, 1926)
மலர் 7, இதழ் 8 (Nov. 02, 1926)

*Continued ...*

# தனவைசிய ஊழியன்

மலர் 5, இதழ் 21

February 10, 1925

Record no. 148

உ சிவமயம்

சென்னைப் பதிவு எண் க௫௦௫. தந்திவிலாசம்:—"Ooliau"

# தனவைசிய ஊழியன்

செவ்வாய்க்கிழமை தோறும் வெளி வருவது.

ஆசிரியன்:—ராய. சொக்கலிங்கன்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

வழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௫. காரைக்குடி ரக்தாக்ஷி ௵ தை௴ ௨௯௳ (௧௦—௨—[illegible]) இதழ் ௨௧.

## ஸ்ரீ காசிவாசி சிதம்பர சுவாமிகள்.

சிதம்பரம் ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பலஸ்வாமிகள் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சிதம்பர சுவாமிகளின் சரித்திரக் குறிப்பு.

ஒரு அன்பர் எழுதுவது:—

ஈண்டு வீற்றிருந்தருளும் பெரியார், "பாண்டி நாடே பழம்பதி" யென மணிவாசகப் பெருந்தகையாரால் பாடப்பெற்ற தென்பாண்டிநாட்டில், திருப்புத்தூர் என்னும் திவ்யதலத்தின் மேல்பால் கண்டவராயன்பட்டி என்னும் நகரில், இளையாத்தக்குடிக் கோயில், கழனிவாசற் குடிப் பிரிவில், சிவபக்தராய் விளங்கிய திருவாளர் பெரிய கறுப்பன் செட்டியார் சிவகாமி யம்மையா ரிருவரின் தவப்பயனால், கலி யாண்டு ௪௯௫௮-ல், விரோதிகிருது௵த்தில் அவதரித்துத் தமது ஈன்றோரால் 'சிதம்பரம்' எனப் பிள்ளைத் திருநாமமிடப்பெற்று வளர்ந்து வருங்காலத்து, காரைக்குடி திருவாளர் அ. மு. அ. அழகப்பச் செட்டியார் குடும்பத்திற்குப் புத்திரனில்லாக் குறையை நிவிர்த்திக்க வேண்டி அன்னார் விருப்பிற்கிணங்கித் தமதன்னை பிதாக்கள் இசைந்ததுவ, அவ் அழகப்பச் செட்டியார்க்குச் சுவீகார குமாரராய் ௪௦-வயதில் காரைப் பெரும்பதி வந்தனர்.

இவர் சிறு வயதிலேயே "விளையும் பயிர் முளையிலே" என்றபடி, சிவாலய விட்டுணுவாலய சேவை, சிவநாராயணநாம பஜனம், அரன் அரி யடியார்பா லன்பு முதலியன நிரம்பப்பெற்றவராய் விளங்கினர். இங்ஙனம் ஆங்கால் ௧௪-வயதில் வதுவை செய்யப்பெற்று, இல்லறம் நடாத்துங் காலத்து ௨௪-வயதில், தமது ஜாதியுரிமைத் தொழின்முறையாற்ற வெண்ணிச் சிங்கை மாநகர் சென்றனர். ஆங்குச் சின்னாட்டங்கித் தொழிலாற்றுங்கால், அன்பரை வலிந்தாட்கொள்ளும் அண்ணலார் திருவருள் முந்துவிக்கத், தமதிள மனைவியையும், ஒன்றரை வயது நிரம்பப் பெறாத பாலருவாயினையுடைய சிறுமகவையும் இதர வாழ்வையும் வாழ்வென வெண்ணாது, காசினிக்கண் மாசறுதலமாய வாரணாசிப் பதியையடைந்து, ஆங்கே பெரியாரிடம் சந்நியாசம்பெற்று, ஆத்திகபுத்தி மிகுதியுமுடையராதலின், சுரநோய்வரினும் நாட்டவறாது கங்கா ஸ்நானம், விச்வேசதரிசனங்கள் செய்தும், வேதாந்த சாஸ்திரங்களைச் சிரவணித்தும், வந்தனர்.

அங்கிருந்து வடதேசத்தின் பாலுள்ள உத்தமக்ஷேத்திரங்களாய பதரி கேதாவரம், பதரி நாராயணம் முதலிய அரிய தலங்களைப், பனிமலைமீதிவர்ந்து மிகுந்த கட்ட நிலையில் இக்காலிருந்திருக்கும் வசதிகளின்றிய காலத்தில் சென்று தரிசித்துக் காசிப் பதி வந்து வைகினர். மூன்றரை வருடங் கழிந்தபின், சிதம்பர க்ஷேத்திரம் வந்து அப்பெரும் பதியில் ஜீவகாருண்யச் செம்மலாய்—பக்திக்கடலாய்—விராக வெற்பாய்—ஞானபானுவாய் எழுந்தருளி யிருந்த ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிகரை யாசிரியரா யடைந்து பணிபுரிந்து, காசியில் வாசஞ்செய்த காரணக்கால், "காசிவாசி" யென ஆசிரியரால் தீக்ஷா நாம மிடப்பெற்று, முறையே வேதாந்த சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தும், ஸ்ரீநடராஜ தரிசனம் நாளுங் கண்டு செய்து வதிந்து வருநாளில், தென்னாட்டுள்ள பல திவ்ய தலங்களைத் தரிசனம் செய்யும் அவா மீக்கூர, ரயில்வசதி முதலியவின்றிய அக்காலத்தில், கால்நடையினராய்ச் சேது வரையுள்ள தலங்கள் சென்று தரிசித்து வந்தனர். அவ்யாத்திரைக் காலத்தில் ஊர்கடோறும் கரபிக்ஷை யேற்றுப், பசிப்பிணி தீர்த்துக்கொள்வர்.

இங்ஙனம் அரிதிற் றல யாத்திரை முடித்து சிதம்பரத்தலத்திலுள்ள தம தாசிரியர்பால் வந்து வதிந்துறை நாளில், தமது ஆசிரியரின் பிற்றைக் காலத்தில், "அவ்வாசிரியப் பீடந் தமக்குதவப் பெறும்" எனும் வதந்தி கேட்டுப், "இப்பெரும் பாரம் யமக்கேன்" என வெண்ணித் தமதாசிரியரிடம் பணிவுடன் விடைபெற்று மீண்டும் காசிப்பதி யெய்தினர்.

சென்ற ஒன்றரையாண்டின் பின்னர், சிதம்பரத்தில் தமதாசிரியர் விதேக முத்தியெய்தவே ஸ்ரீ கோவிலூர் மடாதிபதியாக வெழுந்தருளியிருந்த ஸ்ரீ வீரசேகர ஞான தேசிகரவர்கள், உடனே வரும்படி, "இதுமுறை" தந்தி சொல்லியும், அன்னவர் வர



ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சிதம்பர சுவாமிகள்.

முடியாதெனத் தெரிவித்து விட்டனர். பின் ஸ்ரீ பொன்னம்பலசுவாமிகள் மடத்தில் காரியம்பார்க்க வீரப்பசுவாமிகள் முதலிய சாதுக்கள் ஸ்ரீகாசி சென்று அழைக்கவும், "காசியினின்றுந் திரும்புவதில்லை" யென்னுந் துணிவுடன் சென்ற எண்ணத்தைத் தேய்க்கு மாற்றல் நுகர்வினைக் குண்டாதலின் அவ்வினை தூண்ட மனமொருப்பட்டது.

பின், அப்பெரியாரை அழைத்துவந்து மடாதிபதியாக விருத்திக் கோவிலூர்ப் பரம்பரை யநுஷ்டானமாய்வரும், "நன்னேரத்தில் பாடஞ் சொல்லல்" என்ற முறைப்படி ஆசிரியத்தானத் தமர்ந்தச் சீடர்கட்கு வேதாந்த சாஸ்திர பாடங்கள் சொல்லி வந்தனர். மடத்தின் விவகாரம் வருங்கால், தமதிளம் பருவந் தொடங்கி விவகாரப் போக்கறியாத மனத்திடையா ராதலின் மிக வருந்துவர். மடத்தின் நியமனத்திற்குரிய உரிமைச் சீட்டெழுதி யனுப்புவதாய்க் கோவிலூர் மடாதிபதியவர்கள் பலமுறைதெரிவித்தும்,வேண்டாமெனமறுத்ததுடன், மடத்தில் அமர்ந்து இரண்டுமூன்று வருடங்கள் வரையில், "காசிக்குப்போக வேண்டும்; காசிக்குப் போகவேண்டும்" என்றே கோவிலூர் மடாதிபதிகட் கறிவித்தும் வந்தனர்.

இறைவன் செயலால் சிதம்பரம் மடத்தின் சம்பந்தமாய [illegible] ஏற்பட, [illegible] ஸ்ரீசுவாமிகளைப் பிரதிவாதியாகச் சேர்த்துவிட்டனர். அது [illegible] மாகக் கோவிலூர்ச் சாமிகளால [illegible] எழுதிவைத்திருந்த [illegible] மனச் [illegible] பட்டேற்று ஏற்குமபடி நேர்ந் [illegible] பிணைர்த தாமமாந் துறை தானம் [illegible] யிலும அப்பெரியாரை வேண் [illegible] தனவணிகர் வாழ வளநகர் [illegible] சென்று, புண்ணியத்தின் சுவை [illegible] புண்தாசனாயோளர் தனவணிகர் [illegible] மீட்டுமபொரு ளார்ச்சித்துத் தம [illegible] சமாதி யாலயங் கருங்கல்லால் அழகுற ஆற்றியும், அடியவர்கட்குப்போஜன சாலை புதுதாயமமைத்தும், வேண்டிய பூஸ்திதிகள் வாங்கியும் மூலதனமும் வைத்தும், மடத்தினைப் பலவாற்றாலும் வளமபெறச் செய்தனர்.

பரம ஆஸ்திகர்; பழைய வழக்க ஒழுக்கங்களைக் கைவிடாது நடாத்துதலில் பேராவற் பெரியார். "பால, உன்மத்த பிசாச" பெரியாரைக் குரியவெனப் பெருமறை கூறியாங்கு, சாரநதார் வண்ணம், அவரவர்கள்மனமநோகாமல்நடக்கவேண்டுமென்னும ஆர்வத்தால் இவருடைய வியவஹாரம ஆசார லௌகிகர்கட்குக் கஷ்டமாகவே தோற்றும். அதர்மத்திற்கு அஞ்சுவதில் முதன்மை பெற்றவர். மடத்தின் வேலையாட்களிடத்திலும தாம் செய்தது தவறென உணர்தலை, "மனமாற நான் செய்தது தவறு; இனி யப்படிச் செய்ய மாட்டேன்; நீ வருந்தாதே" என இரங்கிக் கேட்கும் ஒப்புயர்வற்ற குணமொன்றுடையார். இப் பெரியார், சத்கதா காலக்ஷேப முதலாயின நடைபெறுமிடத்தில்சபாமத்தியினிருக்கப் பெறின், கண்ணீரும் கம்பலையுமாய் அடக்கப்படாத ஆர்வத்தால் அழுதழுது உருகுவார். மிக இளகிய மனமுடையவர். இப்பெருந்தகை குரோதிஞு கார்த்திகைமீத்தில் குருத்தானத்தைப்பெற்று, இங்ஙன் கடாத்திவருங் காலத்தில், தமது வயோதிகத்தன்மை கருதியும், பிற்காலத்தில் தக்கார் நியமனமாகாது வழுவுறின் செய்தது பலன் முற்றும் பெறாதாய் விடுமெனவு மஞ்சித் தமது காலத்திலேயே, தம்மையே சரணமடைந்து தமக்குப் பலவாற்றாலும் உறுதுணையாயிருந்து தஞ்சோற்கடவாத, திருவாளர் காரைக்குடி சா. லெ. செட்டியப்ப செட்டியார் முதலிய பேரபிமானிகளுடன் மலாய்நாடு, சைகோன்முதலிய கடற்புற நாடுகட்குச் சென்று பொருள் வருவாய் முதலியவற்றிற்கு உதவியாயிருந்த, தமது கான்முளையாகிய பரஞ்ஜோதிச் சாமியைத் தமது தானத்தின் மடாதிபதியாக விருக்கும்படி ஸ்ரீ கோவிலூர் மடாதிபதியைக் கொண்டு நியமித்தும், செழுமையுற்றத் திமது தானத்துடன் வளர்த்துவந்தார்,

"நாபுக்தம் க்ஷீயதேகர்ம கல்பகோடி சதைரபி"

அதாவது "தான் செய்த கர்மமானது கலபகோடி வருடங்களாயினும் அநுபவியாமல நசியாது" என்ற சுருதிப்படி, நுகர்வினைப்பயனுக்கு சார்ந்தில, பலநோய்கள் தோற்றிவருத்திவந்தன. அவ்வியாதிகட்கு மனமாதிகளா யுமைறபுளிகைத தமது "தேகாதவலக்ஷண ஆகண்டாகார சச்சிதாநந்த சிவருபத்தில ஐக் கைத்துங்கள் இருந்து நான்காயநாள் வியாழனன்று பூர்வபக்ஷமும, திருவாதிரை நக்ஷத்திரமும் அமாத்ச தத்துவம் கூடிய சுபதினத்தில், ஸ்ரீ மலைமகள் கொழுநனும அனலேந்திய அலர்சடையமலனுக்குச் செங்கேலும், செங்கலையும், மாவடுவுமீந்து வரும நாள் ஆவநலை யுதவுறுகுரிய ஆறறலுறும்போது கூவிக்குழைவுதும அவறறினைப பெறறும தனைகுணவாக அவற்றையுந கொளளாது இறைவாக்குதவக் கைமேந்தி மலைக்கூத்துடன செலலுங்கால பசுபதிணையால மெலந்த யாக்கையராதலின காலடறக கழ வீழக் கையிலிருந்த அவைகள் சுமமல சிதற, "இறைவாக்குதவப்பெறலவையே" என்ற தனது வாதத்தை கூறிய ஆராவாளேந்திய தனது மடநறவை யாந்து உயிர் நீக்கத துணிந்தபோது மங்கைபங்களுன புங்கவன் அங்ஙன் மீளுவுற ஆராவாளேந்திய அவரது கரத்தைத தாங்கி இடபாரூடராய்க் காட்சியுதவி தனதடி நீழலிற் சேர்த்திய அரிவாட்ட நாயனார் அடைந்த திருநாளில் கலந்தருளினார்.

"கெடாத வல்வினைநோய்
தீர்த்தட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன்
தன்னையுமாட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந்
தானு மணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே
சேர்ந்திருக்கை யாயிற்றே."

—திருவிசைப்பா.

## வைசிய நாடும் பெண்மணிகள் நூல் நூற்றலும்.

அன்பு பொலிந்து விளங்கும் எமது அரிய சகோதரிகளே!

தற்சமயம் நமது நாட்டில் ஏழை மக்களின் துயரத்தைத் தீர்க்கும்பொருட்டு அவதரித்த பெரியார், காந்தி அடிகள் ஆக்ஞைப்படி, நமது சகோதரர் அனேவரும் நூல் நூற்று அன்னார்க்கு மாதம் தோறும் இரண்டாயிரம் கஜம் அனுப்பி வருகிறார்கள். ஆனால் ஆடவர்கள் இங்கிருக்கும் வரையில்தானே அனுப்பலாம்; அன்னியநாடு சென்றுவிட்டால் அனுப்பத்தோதுப்படாதன்றோ? ஆதலினால், இவ்வரிய பெரிய வேலையைத் தற்சமயம் ஆடவர்கள் நூற்பதைப் போல், சகோதரிகளாகிய நீங்களெல்லாரும் பொறுமையோடு இராட்டினங்களைச்சுற்ற முன் வருவீர்களேயானால், நமது தேசம் நலமடைவதோடு, அன்னிய தேசத்தாரால் நெய்யப் பெறும் ஆடைகளை எதிர் பார்க்க வேண்டிய அவசியமே இராது. அன்னிய தேசத்தார் கண்களைக் கவரும்படி வழவழப்பாக நெய்துவரும் ஆடையனுப்புவதை நிறுத்தினார்களேயானால், நீங்களெல்லாரும் ஆடைக்கு என் செய்வீர்கள்? சகோதரிகளே! நீங்கள் புதுநாகரிகமாகக் [illegible] பிடித்திருக்கும் ஓலை முடைதலிலும் கடுதாசிக் கொட்டான் முடைதலிலும் கவனத்தைச் செலுத்துகிறீர்கள். இனிமேல் அவ்வீண் வேலைகளில் கவனம் செலுத்தாது, ஔவைப் பிராட்டியார் "தேசத்தோ டொத்துவாழ்" என்று சொல்லியவாறு, நீங்களெல்லாரும், இராட்டினத்தைக் கரத்தில் ஏந்தி நூல் நூற்க ஆரம்பித்தீர்களேயானால், நமது தேசத்திற்கு ஓர் புதிய உணர்ச்சி உண்டாகு மென்பதில் கொஞ்சமும் ஐயமில்லை.

தாய்மார்களே! இனியும் அந்நிய தேயத்தாராலும், மில நூலாலும் தயாராகிவரும் கண்டாங்கிகளைக் கணக்கில்லாது வாங்கிப் பொக்கிஷம் செய்து பணங்களைப் பாழாக்கி விடாதீர்கள். இனிமேல் சகோதரிகள் யாவரும்சுத்தக் கதரில் தயார் செய்து வந்திருக்கும் சுங்கடிச் சேலைகளையும், இன்னம் பல வர்ணங்களில் மிக அழகாக நம்தேயத்தி மக்களால் நெய்யப் பெற்று வந்திருக்கும் கண்டாங்கிப் புடவைகளையும், வாங்கி அணிந்து இன்புறுமாறு இறைவனை வழுத்துகிறேன். பெண்மணிகளாகிய நீங்களெல்லாரும் உறுதியோடும் உண்மையோடும் கை ராட்டினத்தைக் கரத்திலேந்தி நூல் நூற்க எழுங்கள்! எழுங்கள்!! இன்றே எழுந்து எவ்வேலையிருப்பினும் அவ்வேலைகளைப் பொருட்படுத்தாது ஊக்கமாக சுதந்தரமெனச்சுற்றுங்கள். இறைவன் அருள் புரிவாராக. வந்தேமாதரம்.

சே. தும. குப. காசி விஸ்வநாதச் செட்டியார்.
(தேசியக்கைராட்டினத்தொழிற்சாலை)
செவ்வூர்.



## அறிவிலி ஐவன்.

ஆசிரியர் (மகாத்மா அவர்களின் குரு) கவுண்ட் லியோ டால்ஸ்டாய்
மொழி பெயர்ப்பாளர் :—
அ. வெ. தியாகராஜா.

க.

ஒரு சிறு பாகம் தவிர பாக்கி பூராச் செய்யையும் ஐவன் உழுது விட்டான். அவனுக்கு வயிற்று வலி இருந்தபோதிலும், அவன் உழுது ஆகவேண்டும். பிடி கயிற்றைத் தளர்த்தினான். கலப்பையைத் திருப்பினான். வேலையை ஆரம்பித்தான். ஒரு தவாளிப்பு ஆகி, மறு தவாளிப்புத் திரும்புகையில் கலப்பை ஏதோ ஒரு வேரினால் தடுக்கப்பட்டதுபோல் தடுமாறிற்று. அது, சைத்தான் தன் கால்களை கலப்பைக் கொழுவில் பின்னிக்கொண்டு பின்னாடி இழுத்தது.

ஐவன் :—"என்ன அதிசயமாயிருக்கிறது! இதுவரையிலும் இங்கு வேர்கள் இருந்ததில்லையே!! இப்போதுஎன்ன புதிதாயிருக்கிறது!!!" என்று ஆலோசித்துக் கொண்டு தவாளிப்பின் ஆழத்தில் கையை விட்டுத் தேடினான். மிருதுவாய் ஒன்று தென்பட்டது. அதைப் பிடித்து வெளியில் எடுத்துப் பார்த்தான். அது வேர்போற் கறுப்பாய் இருந்தது. ஆனால் கால் கைகளை ஆட்டிற்று. அதுதான் அந்தக் குட்டிச்சைத்தான்.

"என்ன அசிங்கம் பிடித்தது" என்று சொல்லிக் கொண்டே ஐவன் அதைக் கலப்பையில் அடிக்கப் போனான். ஆனால் "என்னைத் துன்புறுத்தாதே. உனக்கு என்ன வேண்டுமோ அதைச் செய்வேன்" என்று அது கத்திற்று.

ஐவன் :—எனக்காக நீ என்ன செய்ய முடியும்?

குட்டிச்சைத்தான் :—நீ என்ன செய்யச்சொல்லுகிறாயோ, அதைச் செய்ய முடியும்.

(ஐவன் தலையைச் சொறிந்து கொண்டான்.)

ஐவன் :— எனக்கு வயிற்றில் வலி இருக்கிறது; அதைச் சவுக்கியம் செய்ய முடியுமா?

குட்டிச்சைத்தான் :—முடியும்.

ஐவன் :—சரி! செய்பார்ப்போம்!!

குட்டிச்சைத்தான்கீழேகுனிந்தது; சற்றுத் தேடிப் பின்னர் கையால் கிளறிற்று. மூன்று கிளையுடைய ஒரு வேரைப் பிடுங்கி ஐவனிடம் கொடுத்தது.

குட்டிச்சைத்தான் :— இந்தா! வியாதியுடையவர்கள் இதில் ஒரு கிளையைச் சாப்பிட்டால் போதும். எந்த வியாதியும் தீர்ந்துவிடும்.

ஐவன் வேரை வாங்கி, ஒரு கிளையைப் பிய்த்து விழுங்கினான். உடனே வயிற்றுவலி நின்று விட்டது. மறுபடி குட்டிச்சைத்தான் "என்னை விடு. நான் பூமிக்குள் போகிறேன். மறுபடி எப்போதும் வரவில்லை" என்று கெஞ்சிக் கேட்டது.

ஐவன் :—"நல்லது! உன்னைக்கடவுள் காப்பற்றட்டும்" என்று சொன்னான்.

ஐவன கடவுள் என்று சொன்ன மாத்திரத்தில் தண்ணீரில் எறிந்த கல் போன்று குட்டிச்சைத்தான் பூமிக்குள் நுழைந்து விட்டது. அந்த விடத்தில் ஒரு துவாரம் மட்டும் இருந்தது. ஐவன் பாக்கி இரண்டு வேர்த் துண்டுகளையும் தொப்பிக்குள் வைத்துக் கொண்டு உழ ஆரம்பித்தான். உழுது முடிந்ததும கலப்பையைத் தூக்கிக் கொண்டு வீட்டிற்குச் சென்றான். மாட்டை அவிழ்த்து விட்டுவிட்டுக் குடிசைக்குள் நுழைந்தான். அவன் சகோதரன சைமன மனைவியுடன் சாப்பிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தான். சைமனுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப் பட்டுவிட்டன. அவன் அதிகக் கஷ்டத்துடன் சிறைச்சாலையிலிருந்து தப்பித்துக்கொண்டு தகப்பனுடன் வசிக்க வந்திருக்கிறான்.

சைமன் :—தம்பி! நான் உங்களுடன் வசிக்க வந்திருக்கிறேன். புதிதாக எனக்கு வேலை அகப்படு மட்டும் சாப்பாடு போடு.

ஐவன் :—நல்லது எங்களுடன் இருங்கள்.

ஐவன் பலகையில் உட்காரப் போனான். அவனிடமிருந்து வந்த வெயர்வை நாற்றம் பொறுக்க மாட்டாமல் ஆங்கிருந்த சைமன்மனைவி, அவனிடம் "இந்த அசுத்தமான குடியானவுடன் நான் இருந்து சாப்பிட முடியாது" என்றாள்.

சைமன :— என் மனைவி உன்னிடமிருந்து நல்ல வாசனை வீசவில்லை என்கிறாள். ஆகலின் நீ வெளியில் போயிருந்து சாப்பிடு.

ஐவன் :— நல்லது! எப்படி இருந்தாலும் இன்றிரவு குதிரைகளை மேய விடுவதற்காக நான் வெளியில் போக வேண்டும்.

அப்படியே அவன் சிறிது ரொட்டியை எடுத்துக் கொண்டு குதிரைகளுடன் விடுபுலத்துக்குச் சென்றுவிட்டான்.

(தொடரும்)

## மதுபான வியாபாரம் தடைப்பட்டிருக்கிறது.

ஜொகூரைச் சேர்ந்த வத்துப்பகாரென்னும் ஊரில் ஜப்பானியர்கள் ஸ்டேட்டில் கூலிவேலை பார்க்கும் நமது பாரதநாட்டு ஏழை மக்களாகிய தமிழ் ஜனங்களில், கள்ளை யருந்தித் தொழில் ஒன்றையும் கவனியாது கூலிவேலை செய்து பெறும் சொற்ப வருமானத்தையும் செலவழித்து ஏழையாய்த் திரியும் இந்தியர்களை, கள்ளிலமைக்குத் தொண்டுவரும் பொருட்டு, மேற்படி ஸ்டேட் காரியஸ்தரவர்கள், "ககூஉ-ஞு ஜனவரி மாதம் முதற்கொண்டு கள் வியாபாரம் செய்யக்கூடா" தென்று, புது வருஷத்திய அநுமதியையும் தடைப்படுத்தி, வியாபாரிகளுக்கும் மதுபானக் கெடுதல்களால் ஏற்படும் வேலைக் குறைவுகளையும் எடுத்துப் போதித்து, கள் வியாபாரத்தை நிறுத்தும்படி செய்திருக்கிறார்கள். இவ்வாறு பரோபகாரச் சிந்தைகொண்டு முன்னெழுந்த ஜப்பானியர்களுக்கும், அவர்கள் வார்த்தையை நன்கு மதித்துத் தமக்கு வரும் லாபத்தைக் கருதாது நிறுத்தம் செய்திருக்கும் மதுபான வியாபாரிகட்கும், மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றோம், இறைவன் நீண்ட ஆயுளையும் ஐசுவரியத்தையும் கொடுத்து ரக்ஷிப்பானென நம்புகின்றேன். இதுபோலவே இன்னும் உள்ள ரப்பர் ஸ்டேட்டுகளிலும் கள்ளுண்ணும் கெட்ட பழக்கத்தை அறவே ஒழிக்குமாறு குகப்பெருமான் அருள்பாலிப்பானாக.

ஓர் தேச அபிமானி, மூவார்.

## மதுரை ஜில்லாவில் பஞ்சு கொட்டும் பள்ளிக்கூடம்

தமிழ்நாட்டுக் கதர்க் கழகத்தார் சென்ற மாதங்களில் முறையே காரூர், புதுப்பாளையம், கரிசேரி ஆகிய இம் மூன்று இடங்களிலும் பஞ்சு கொட்டும் பயிற்சிப் பள்ளிக்கூடம் வைத்து நடத்திய விஷயம் பொது ஜனங்கள் அறிந்ததே. இம்முறை மேற்படி பள்ளிக் கூடத்தை மதுரைஜில்லா பட்டனேந்தல் வாகைக்குளம் என்ற கிராமத்தில் நடத்தத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இம்மாதம் கரு-உ யன்று பள்ளிக்கூடம் தொடங்கப்படும். பள்ளிக்கூடத்தில் சேரும் மாணவர்களுக்குப் பஞ்சு கொட்டுதல், நூல் நூற்தல், கதிர் நிமிர்த்தல் முதலியவைகளில் ஒருமாத காலம் பயிற்சி யளிக்கப்படும். பயிற்சி பெறுங்காலத்தில் இலவசமாக உணவும் இடவசதியும் அளிக்கப்படும். போக்குவரவு செலவுகளை மாணவர்களே பொறுத்துக் கொள்ளவேண்டும். மேற்படி பட்டனேந்தல் வாகைக்குளம் என்னும் கிராமம், மதுரை, ராமேஸ்வரம் புகைவண்டிப் பாதையிலுள்ள திருப்பாச்சேட்டி நிலையத்திலிருந்து மூன்று மைல் தூரத்திலிருக்கிறது. மதுரை நகரிலிருந்து சுமார் உo-மைல் தூரம் இருக்கும். பள்ளிக்கூடத்தில் சேர விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்துக்கு உடனே மனுச்செய்து கொள்ளவேண்டும்:—
"மானேஜர் பட்டனேந்தல் வாகைக்குளம், திருப்பாசட்டிபோஸ்மெதுரை"

## வைசிய நாட்டு செய்தி

### தேவகோட்டை ஸ்தல ஸ்தாபன சபைக் கூட்டம்.

(நமது நிருபரிடமிருந்து)

இம்மதி ௧௧-ம் நாள் காலையில் கூடிற்று. ௯-அவயவிகள் வந்திருந்தனர். தேர்தல் பட்டியல் தயாரிக்கும் விஷயமாய்த் தலைவருக்கும் கிருட்டினன் செட்டியார் கட்சியினர்க்கும் பெருத்த விவாதம் நடந்து, சபையில் பெருங் குழப்பமும் இரைச்சலுமாக விருந்து, நிலைமை கவலைக்கிடமானதாகவு மிருந்தது. திருவாளர்களான அழ. சுப. பழ. சுப்பிரமணியச் செட்டியாரவர்களும் கரு. கி. சொர்ணநாதன் செட்டியாரவர்களும் பிற்பகல் ௧-௩0வரை காத்திருந்து, ராஜித் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றி, இச்சபையின் கௌரவத்தைக் காப்பாற்றினார்கள். மே. த. மாகாணாதிபதி வரும் சம்பந்தமாயும், தண்ணீர்க் குழாய் சம்பந்தமாயும், தேர்தல் பட்டியல் தயாரிக்கும் சம்பந்தமாயும், ரஸ்தாக்களை விசாலப்படுத்துதல் சம்பந்தமாயும் தீர்மானங்கள் செய்யப்பட்டன. அவைகளுள் ரஸ்தாக்களை விசாலப்படுத்துதல் சம்பந்தமான தீர்மானத்தைப்பற்றின நடவடிக்கைகளாவன:—திருவாடானை சர்க்காரிடமிருந்துவந்த கடிதம் படிக்கப்பட்டு அவ்விதமே தீர்மானிக்கப்பட்டது. அதில் மற்ற இடங்களின் சொந்தக்காரர்களுக்குச் சதுர அடி ௧-க்கு ஒரு ரூபாய் வீதமும் இடித்துக் கட்டச் செலவும் அனுமதித் திருக்கிறார்கள். நாவிதர்களுக்குச் சொந்தமான இடத்துக்கு மட்டும் சதுரஅடி ஒன்றுக்கு அரை ரூபாய் வீதம் மட்டும் அனுமதித்திருக்கிறார்கள். இடித்துக்கட்ட ஒன்றுமில்லை. இதைப்பற்றிச் சில அங்கத்தினர்கள் ஆக்ஷேபனை எழுப்பியும், பிறர் துன்பம் ஒரு சிறிதும் அறியாத சில அவயவிகளும் தலைவரும் திருவாடானை சர்க்கார் சிபார்சையே ஆதரித்து, "நாவிதர்கள் கையெழுத்துச் செய்துவிட்டார்கள்; அப்படியிருக்க அவயவிகள் இதைப்பற்றிஏன் விவாதிக்கவேண்டும்" எனச் சொல்லி மழுப்பிவிட்டது மிகவும் வருந்தத்தக்கது. நாவிதர்கள் என்னிடம் சொல்லிக்கொண்டதாவது:—"திருவாடானை சர்க்கார் அதிகாரி எங்கள் எல்லோரிடத்திலும் கையெழுத்து வாங்கவில்லை; மற்றவர்களுக்குக் கொடுக்கும் விலைபோல் உங்களுக்கும் தருவோம் எனச் சொல்லி எங்களில் இருவரிடம் கையெழுத்து வாங்கினார்; பிறர்கள் இடத்தைக் காட்டிலும் எங்கள் இடம் எவ்விதத்திலும் தாழ்ந்ததில்லை" எனவும், "ஸ்தலஸ்தாபன சபைத் தலைவரும் திருவாடானைசர்க்காரும் வேண்டுமெனவே இம்மாதிரி செய்திருக்கிறார்கள்" எனவும், நாங்கள் "ஏழைகளானாலும் இச்சவிஷயத்தை இப்படியேவிட்டுவிடப்போவதில்லை" எனவும், "பாரபக்ஷமாகச் சிபார்சு செய்த திருவாடானை சர்க்கார் அதிகாரி இறந்துவிட்டார்" என்றும், "அவர் இறக்கப்போகும் தருவாயில் ஏழைகளாகிய "எங்கள் பாவத்தில் கைவைத்தது தானிஷ்டவசமே" எனவும், எங்கள் இடத்திற்கு அருகிலுள்ள வைத்தி ஆசாரி இடத்துக்குச் சதுர அடி ௧-க்கு ௧-ரூபாய் வீதமும் இடிக்கவும்கட்டவும் கொடுக்கும்போது எங்கள் இடத்துக்கு வேறுவிதமாய்க் கொடுக்கத் தீர்மானித்ததற்குக் காரணமென்னவென்பதை ஸ்தல ஸ்தாபன சபைத்தலைவர் விளக்கட்டு" மெனவும் சொன்னார்கள். நாவிதர்கள் முறையீடு நியாயமானதே. தாரசுபேல் நிறக்கும் நெஞ்சுடையோர் எவரும் அவ்விதமே அபிப்பிராயப்படுவர். ஸ்தல ஸ்தாபன சபையார் இதுபற்றிப் புனராலோசனை செய்யவேண்டியது இன்றியமையாதது.

## பிறநாட்டுச் செய்தி

ஹெட்ஜாஸுக்குச்சென்ற முஸ்லீம் பிரதிநிதிக் கூட்டத்தார், முயற்சிபயனடையாது திரும்பினர்.

* * *

லண்டனில், தற்போது, மொத்தம் ௧௨,௪௧,000 பேர்கள் வேலையில்லாதிருக்கின்றனராம்.

* * *

பாரிஸில், பெரிய கோவில் மணிகளையடிக்க மின்ஸார சக்தி உபயோகிக்கிறார்கள்.

* * *

எலும்பு வழியாகக் கேட்குமாறு ஒரு புதிய முறையை ஐரோப்பாவில் கண்டு பிடித்திருக்கின்றார்கள்.

* * *

இங்கிலாந்தில், பூமியிலிருந்து அகப்பட்ட கல்லாயுதங்கள், ௪0,000 ஆண்டுகட்கு முந்தியவை எனத் தெரிகின்றனவாம்.

* * *

துருக்கியர்களை ஐரோப்பாவினின்றும் விலக்க வேண்டுமென்று, "பால்கன்" என்ற பத்திரிகை கூறுகிறது.

* * *

லண்டனில் ஸெண்ட் பால் மாதாக் கோவிலைப் புதுப்பிப்பதற்காக இதுவரையில், ௨,௩௭,000 பவுன் சேகரிக்கப்பட் டிருக்கின்றன.

* * *

யுத்த காலத்திற்கு முன்பிருந்த மாதிரி தபாற் கட்டணங்களைக் குறைத்தல் வேண்டு மென்னும் கிளர்ச்சி இங்கிலாந்தில் நடந்து கொண்டிருக்கிறது.

* * *

ஆஸ்திரேலியாவிலிருந்து ஐரோப்பா யாத்திரைக்குப் புறப்பட்ட சுமார், ௧௫0-மாணவர்களும் தற்போது லண்டனில் தங்கியிருக்கின்றார்கள்.

* * *

மதகுருவைப் பிரஷ்டம் செய்திருப்பது சம்பந்தமாக கிரீஸுடன் ஏற்பட்டிருக்கும் தங்கள் தகாரு விஷயத்தில், அந்நிய நாடுகள் தலையிடுவதைத் துருக்கி வெறுக்கிறது.

* * *

குரங்கின் நரம்பைக் கொண்டு இளமையாக்கிக் கொள்ளும்முறையில்சிகிச்சை செய்துகொண்ட கெய்சர் தமது மூத்தமகனைக்காட்டிலும் இளமை யுடையாராகத் தோற்றுகின்றாராம்.

* * *

கான்ஸ்தாந்தி நோபிலிலிருந்து கிறிஸ்தவ மதகுருவைப் பிரஷ்டம் செய்திருப்பது சம்பந்தமாகத் துருக்கிக்கும் கிரீஸுக்கும் தகராறு ஏற்பட்டிருக்கின்றது.

* * *

லண்டனில் மின்சாரத் தொழிற்சாலையின் வேலை நிறுத்தத்தால் சில நாட்கள் நகரத்தில் விளக்கில்லாமலிருந்ததாம். அன்று அந்த நகரம் நரகமொத் திருந்திருக்கும் போலும்.

* * *

"மெக்ஸிகோவில், தன்னைக் கொல்வதற்காகவே எதிரி தன்னைப் பார்த்துச் சுட்டான்" என்று ஒருவன் பிராது செய்தான். குற்றவாளி, "தான் இவனைக் கொல்ல எண்ணிச் சுட்டதில்லை யென்றும், தனது வேறொரு எதிரி யென்று இவனை மயங்கித் தவறுகச் சுட்டுவிட்டேன் என்றும்" வாக்குமூலம் அளித்தான். உடனே, குற்றவாளியை நீதிபதி விடுதலை செய்துவிட்டாராம்; தண்டனை யென்பது செய்த குற்றத்தின் அளவதோ? குற்றவாளியின் அளவதோ? பிராது கொடுத்தவனின் அளவதோ? என்பது தோன்றவில்லை.

* * *

"துருக்கிய அரசாங்கத்தின் உரிமை சம்பந்தமான விஷயங்களில், அந்நியர் தலையிடுவதை நாம் அநுமதிக்க முடியாது; நமது சுதந்தரம் பாதிக்கப்படும் பக்ஷத்தில், அதைப் பாது காப்பதற்காக அவசிய நடவடிக்கை எடுத்துக் கொள்வதுமாத்திரமன்றி, அவசியமேற்பட்டால், ஆயுத மெடுத்தும் போராடவும் வேண்டும்" என்று துருக்கியப்பிரதமமந்திரி பெதிபே ஜனப் பிரதிநிதி ஸபையில் பேசினர்.



## இந்தியச் செய்தி.

பம்பாயில் ஒரு பிஸ்கோத்துத் தொழிற்சாலை ஏற்படப்போகிறது.

* * *

திருவள்ளுவர் திருநாள் மாசித் திங்கள் ௨௮-ம்நாள் புதன்கிழமை வருகின்றது.

* * *

கான்பூர் அலகாபாத் முதலிய இடங்களில் சதியாலோசனைப் பிரசுரங்கள் வழங்கப்படுகின்றன.

* * *

குன்றக்குடியில் நிகழும் பிப்ரவரி மாதம் ௩௨-முதல் ஒரு தந்தியாலயம் ஏற்பட்டிருக்கின்றது.

* * *

சென்னை சட்டசபைத் தலைமைக்கு ஸ்ரீமான் ஸ்வாமிக்கண்ணு பிள்ளை யவர்களே தெரிந்தெடுக்கப் பெற்றனர்.

* * *

பம்பாயில் சில நாட்கட்கு முன் மின்சார சக்தியால், புகைவிரதம் ஓட்டினார்கள்; இந்தியாவுக்கு இதுவே முதன்முறை.

* * *

இந்துமத தர்மபரிபாலன சட்டக் கழகத்துக்குத் தலைவராக ஸ்ரீமான் டி. சதாசிவ ஐயர் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

* * *

கல்யாண காலத்தில், ஒரு ராட்டும் ஸ்திரீதனமாகக் கொடுப்பதென்று பஞ்சாப் சீக்கியர்கள் விதி செய்திருக்கிறார்கள்.

* * *

மதுரை வக்கீல் சங்கத்திற்கு ஸ்ரீமான் ஜார்ஜ் ஜோஸப் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்.

* * *

அமிர்தசாஸிலுள்ள பொற்கோயிற் குருக்களில் ஹரிநாமசிங் என்னும் தீண்டாதவர் ஒருவர் குருவாக விளங்கி வருகிறார்.

* * *

கோயமுத்தூர் ஜில்லா பேரூரில் மாசி மகத்தன்று கூடப்பெறும் ஒரு சாது மகாநாட்டில், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்து ஸ்வாமிகள் தலைமை வகிக்கப் போகிறார்கள்.

* * *

இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி கொடுப்பதன் நிமித்தம் இந்தியாவிலுள்ள சுதேச மன்னர்களின் அபிப்பிராயங்களை அறிய இந்திய மந்திரியான லார்ட் பர்கன்ஹெட் விரும்புகின்றார்.

* * *

சீக்கியர்க்குள் தீண்டாமை என்றுமே கிடையாதாம். தற்போது கட்குடியும் புகைக்குடியும் கிடையாதாம். மீறிக் குடிப்பவர்களைக் கோவிலுக்குள்விடுவதில்லையென்ற கட்டுப்பாடும் செய்திருக்கின்றார்கள்.

* * *

"பம்பாய் க்ரானிகல்" பத்திரிகையை "வாய்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகையின் சொந்தக்காரரான ஸ்ரீமான் பெல்காம் வாலா வாங்கிவிட்டார். இனி "வாய்ஸ் ஆப் இந்தியா" வெனும் பத்திரிகை நிறுத்தப்படுமாம்.

* * *

கும்பகோணத்தில், ஜனவரி மாதத்துக் கிஸ்திபாக்கிக்காக ஸ்ரீமான் சி. ஆர். லட்சுமிவராஹஐயங்கார் அவர்களுடைய ௧௧-ஏகரா மகசூலும், ஸ்ரீமான் பந்துலு ஐயருடைய நிலங்களும் ஜப்தி செய்யப்பட்டிருக்கின்றன.

* * *

சித்திரம் சிற்பம் முதலியதுறைகளிற் பயின்றுவரும் மாணவர்கட்கு அரசாங்கத்தார் உபகாரச் சம்பளம் கொடுத்தல் வேண்டுமென்றும், இவர்களைப் பயிற்றுதற்கென்று ஒரு தனிக் கலாசாலை ஏற்படுத்தல் வேண்டுமென்றும் இராஜ்ய சபையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

* * *

சென்னை கந்தசாமி கோயிற் திருவிழாவின்போது, சென்னை மாகாணாதிபதி கோஷன் பிரபு குடும்ப பரிவாரங்களுடன் வரவழைக்கப்பெற்று, அத்தெய்வத்தைக் காட்டிலும் அதிகமாக உபசரிக்கப் பெற்றனராம். மெய்யடியார் பலர்க்கு ஊர்ச்சேவகக் கூட்டத்தாரால் அடியும் உதையும் அதிகமாம். அந்தோ! தேவஸ்தான பரிபாலனச் சட்டமே!!

* * *

தெற்கே ஒரு பெரிய கோவில் தர்மகர்த்தாானவர், தமது சொந்த ஜவுளிக்கடையில் ௧0-வருஷ காலங்களாக விலை போகாதிருந்த ௭௫-ரூபாய்ப் பட்டுப் புடவையை வட்டியும் சேர்த்துக் கணக்கிட்டு ௨௫0-ரூபாய்க்குத் தம் அதிகாரத்துக்குட்பட்ட அந்தக் கோயிற் கொடியேற்றத்தன்று அம்மனுக்கே விலைபேசிச் சாத்திவிட்டார். இங்ஙனமிருப்பின், தர்மபரிபாலனச் சட்டம் என் அழுதுக்கு வாராமற் போகும்?

* * *

புகை வண்டியில் செல்லும் பிரயாணிகட்குள் வெள்ளை—கறுப்பு எனும் பேதம் பாராட்டப்படாதென்றும், யாவர்க்கும் கட்டணத்திற் கேற்ப சமவசதிகள் அளிக்கப்படல் வேண்டுமென்றும் கொண்டு வரப்பட்ட மசோதா நிறைவேறிவிட்டது. ஆயினும், வெள்ளையர் முயற்சி அதற்கு எதிரிடையாகப் பலப்பட்டு வருதலால், அரசாங்கத்தார் அதனைச் சட்டமாக்குவாரோ என்பது சம்சயத்திலிருக்கின்றது.

* * *

புதுக்கோட்டை ஸெஷன் கோர்ட்டில் நடந்த ஒரு கேஸில், அந்த சமஸ்தானப் பிரதமநீதிபதி ஸ்ரீமான் கணபதி சாஸ்திரிகள், முதல் சாட்சியாக விசாரிக்கப்பட வேண்டியவராக இருந்தார். அப்பெரியார், அந்த [illegible]க்குள் நுழையும் போதும் நிற்கும் போதும் திரும்பும்போதும், சாதாரண சாக்ஷிகளைப்போலவே அவைய்டக்கம் காட்டியும், எத்தனை உபசாரங்கள் செய்தும் நாற்காலி முதலானவற்றில் உட்காராமலும், கூண்டில் நின்று சாட்சியம் அளித்தது மதிக்கத்தக்கதென்று "ஜனமித்திரன்" தெரிவிக்கிறது.

## ஸ்ரீ சிதம்பரம் பொன்னம்பல ஸ்வாமிகள் மடாலயம்.

ஸ்ரீ சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடாலயத்தில் சென்ற இருபதாண்டுகளாக மடாதிபதியாகவிருந்த ஸ்ரீகாசிவாசி சிதம்பர சுவாமிகள் என்னும் பெரியார் நாளிது தை-மீ ௨௪௨ குருவாரதினம் தமது ௭௩-வயதில் மடத்தில் விதேஹ முக்தி பெய்தினர். அவரது திருமேனிக்கு ஸாதுக்களும் பக்த ஜனங்களும் புடைசூழ சர்வாபிஷேகமும் தனதுதானமுனையாகிய பரஞ்ஜோதி சுவாமிகளால் செய்யப்பெற்று, இரவு ௯-மணிக்கு மேளவாத்தியங்கள் ஹரிநாம, சிவநாம பஜனங்கள் வாண வேடிக்கைகள் முதலிய வைபவங்களுடன் விமானத்தேற்றி திருவீதியுலாக் கண்டு, இரவு ௧0-மணிக்கு மடத்தில் சமாதி செய்வித்தனர். ஸ்ரீ சுவாமிகட்கு கதராடையே அணியப் பெற்றிருந்தது. வரும் மாசி-மீ ௩௨ சனிக்கிழமை மோக்ஷ தீபத் திருநாள் நடைபெறும். ௧0-தினங்களிலும் வருபவர்கட்கு அன்னமளித்து அன்றையதினம் வரும் சாதுக்கட்கும் ஏழைகட்கும் கதராடையுதவப்பெறும். (ஒரு நிருபர்)



காவென் செயும்! வினை தானென்
 செயும்! எனை நாடிவந்த
கோனென் செயும்! கொடுங் கூற்றென்
 செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
 தண்டையும் சண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
 னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தன வைசிய ஊழியன்.

காரைக்குடி. தைமீ உகூ

## ஸ்ரீ பொன்னம்பலசுவாமிகள் மடாலயம்.

தில்லைத் திருத் தலத்திலுள்ள இம்மடாலயம், நாட்டுக்கோட்டை நகர வைசியர்களாகிய நம்மவர்களின் பொருள்கொண்டு காணப்பெற்ற திருமடங்களுள் ஒன்று. இது, ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளென்னும் பெரியோராற் காணப்பெற்றமடமாதலின், பொன்னம்பல சுவாமிகள் மடம் என்னும் பெயர்த்தாயிற்று. அன்றி, இம் மடம் கோ. சித. மடம் என்றும் வழங்கப்படுகிறது. இதன்பொருள் கோவிலூரைச் சார்ந்த சிதம்பரம் மடம் என்பது. இம்மடம் கோவிலூர் ஆதீனத்திற்கு உட்பட்ட மடமேயாகும். இச்சிதம்பரம் மடத்துக்கு மடாதிபதிகளை நியமிக்கும் உரிமை கோவிலூர் மடாதிபதிகட்கு உண்டு. இவ்வுரிமையைக் கோவிலூர் மடாதிபதிகட்கு இம்மடங் கண்ட ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் கர ஆண்டு ஆவணித்திங்கள் இருபத்தாறும் நாள் நல்கினரென அறிகிறோம். அந்நாள் கோவிலூரில் மடாதிபதியாக அமர்ந்திருந்தவர்கள் ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிகரவர்கள். இவர்கள் சிறந்த அறிவாளி. இவர்கள் காலத்திற்குள் கோவிலூர் இந்திர லோகத்தையும் வெல்லும் வனப்புடையதாக ஆக்கம்பெற்றது என்பது அனைவரும் அறிந்தத்.

இப்பொழுது இறைவன் திருவடியிற் கலந்தருளிய பெரியார் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சிதம்பரசுவாமிகளை மடாதிபதியாக நிறுவியவர்கள் ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிகரவர்களே. இந்த ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் சாதக ரூபமும் திருவுருவமும் முதற் பக்கத்தில் பொறிக்கப்பெற்றுள்ளன. அதனைப் படித்துணர வேண்டுவது அன்பர்கள் கடமை. ஸ்ரீ சுவாமிகள் குரோதன-ஆண்டு மடாதிபதியாக அமர்ந்தனரென்று சரித்திரக் குறிப்பால் அறியக் கிடக்கின்றது. மனமே, சுவாமிகள் தலைமையில் இம்மடம் இருபதாண்டுகள் நடந்துவருகின்றன. இவர்கள் காலத்தில் மடத்தைச் சீருற அமைத்து நிலமும் பொருளும் ஒல்லும்வகை சேகரித்துத் தம் குருநாதனாகிய ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகட்குக் கோவிலாகவும் குளந் தொட்டும் ஆற்றியிருக்கும் அறங்கள் கண்கூடே. நமது சிதம்பர சுவாமிகள் சீரிய அறவொழுக்க முடையவர்கள்; சிறந்த படிப்புடையவர்கள்; இளகிய மனமுடையவர்கள்; ஆடம்பரத்தில் விருப்பற்றவர்கள். நமது கோவிலூர் ஆதீனத்திற்குட்பட்ட மடங்கள், இந்நாளின் ஏனைப் பல மடங்கள் போலாது, ஆரவாரத்தை அறவே அகற்றியவை என்பது அனைவரும் அறிந்ததே.

அம்மடங்களுள் ஒன்றாகிய சிதம்பரம் திருமடத்ததிபர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள், தமது எழுபத்து மூன்றாவது ஆண்டில் இத் தைத்திங்கள் இருபத்து நான்காம் நாளில், தமது உடல்விடுத்து இறை திருவடி நீழலில் இரண்டறக் கலந்தருளினர்.

சில ஆண்டுகள் முன்னர் இப் பெரியார் உடல் பெரும் பிணியாற் பீடிக்கப்பட்டிருந்தனரென்று, இவர்களும் நகரத்தார் பலரும் இப்பொழுது ஸ்ரீ கோவிலூர் மடாதிபதியாக விருக்கும் ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிகரவர்களும் ஆலோசித்து, பின் பட்டத்திற்கு இம்மடத்தில் ஏறக்குறைய இருபது ஆண்டுகளாக உறைந்து மடத்தின் நலத்திலேயே நாட்டஞ் செலுத்திச் சுவாமிகட்கு உறு துணையாகவிருந்து அறமாற்றி வரும் ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகளை நிறுவினர். பரம்பரை வழக்கப்படி கோவிலூர் மடாதிபதிகள் உரிமைச் சீட்டும் எழுதிவைத்தார்கள். அதில் இப்பொழுது விதேக முத்தியடைந்த ஸ்ரீ சுவாமிகள் உள்ளவரை அவர்களைக் கலந்தும், பின்னர், தாமாகவும் ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகளே நடாத்தி வருவதென எழுதிவைத்தனர். அது இரௌத்திரி ஆண்டில் எனத் தெரிகிறது. பின்னர், ஸ்ரீ கோவிலூர் மடாதிபதிகள் அவ்வுரிமையை ரத்துசெய்து விட்டதாக ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகட்கு அறிவித்ததாகவும், அதற்கு அவர்கள் காரணம் அறிவிக்கும்படி தெரிவித்ததாகவும் அதற்கு ஒன்றும் பதில் இல்லையென்றும் தெரிகிறது.

அதன் பின்னர், ஸ்ரீ சிதம்பர சுவாமிகள், ஸ்ரீபரஞ்சோதி சுவாமிகளையே தமக்குப்பின் நியமிக்க வேண்டுமெனவும் அவர்களை நீக்க வேண்டுமென்று சில எதிரிகள் செய்யும் சூழ்ச்சிகளை அங்கீகரித்தல் ஆகாதெனவும், நகரத்தாருக்கும் கோவிலூர்ச் சுவாமிகட்கும் கடிதமெழுதி வைத்திருப்பதாகவும் தெரிகிறது.

இப்பொழுது சுவாமிகள் விதேக முத்தி யடைந்து விட்டார்கள். மடாதிபதி நியமன விஷயம் தகராறிலிருக்கிறது. ஸ்ரீ கோவிலூர் மடாதிபதி இரண்டு நாட்கள் முன்னர்தான் சிதம்பரத்திற்குச் சென்றிருக்கிறார்களென அறிகிறோம். நகரத்தார் பலரும் ஆண்டுச் சென்றிருக்கிறார்கள். சிதம்பர சுவாமிகளின் பத்தாம் நாள் இச் சனிக்கிழமை வருகிறது. அன்று இன்னும் பல நகரத்தார் சிதம்பரம் செல்வார்கள். இதை வியவகாரமின்றி ஆண்டுச் சென்றிருக்கும்



நகரத்தாரும் ஸ்ரீ கோவிலூர்ச் சுவாமிகளும் முடித்து வைத்தல் நலம்.

இப்பொழு திருப்போருக்குள் ஸ்ரீபரஞ்சோதி சுவாமிகளே பட்டத்திற்குத் தகுதி யுடையவரென்று நாம் கருதுகின்றோம். ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகளை மடாதிபதியாக நிறுவினால், மடமும் அறமும் பல்லாற்றானும் வளர்ச்சியுறுமென நாம் உண்மையாக நம்புகிறோம். ஸ்ரீபரஞ்சோதி சுவாமிகள் அன்று இப்பதவி வேண்டாமென்று மன்றாடினதாகவும், வற்புறுத்தி ஏற்றுக்கொள்ளச் செய்து எழுதி வைத்த தாகவும் தெரிகிறது. அன்று கட்டாயப்படுத்தி ஒன்றைச் செய்துவிட்டு, இன்று அவர்களை மறுத்தல் அறமன்று. மறுத்தற்கு நிரூபிக்கத் தக்க என்ன காரணங் கூறுகிறார்களென்பதும் தெரியவில்லை. இப்பொழுதும் ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் நகரத்தாரும் கோவிலூர் மடாதிபதிகளும் பார்த்துச் செய்வது சரியென்றே சொல்லுகிறார்களென்றறிகிறோம். பொறுப்பேற்ற இவ்விருவரும் நியாய நெறியாகச் செய்ய வேண்டுவது கடமை.

நகரத்தாருக்கும் ஸ்ரீ கோவிலூர் மடாதிபதிகட்கும் விருப்பமில்லா விட்டால், ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் ஒதுங்கி விடுதலே சிறப்புடைத்து என்பது நமது எண்ணம். நமது பொன்னம்பல சுவாமிகள் மடத்திலும் பட்டத்தகராறு வந்தமைக்கு வருந்துகிறோம். வழக்கின்றிச் சமாதானமாக எல்லோர் மனமும் மகிழும்படியான முடிவுபெற அம்பலத்தாடும் எம் பெருமான் அருள்வானாக.

## இடிமுழக்கம்.

கட்டுரை வரைவோர்க்கு.

கட்டுரைவரைவோர், நாம் பன்முறை நமது ஊழியனில் எடுத்தோதியும் அதனைக் கவனியாது, இப்பத்திரிகை ஏற்றுக்கொள்ள முடியாத அளவில் நீண்ட வியாசங்கள் எழுதிவிடுகிறார்கள். அவ்வியாசங்கள் வெளியிட முடியாமல் தள்ளுபடியிற் சேர்க்கப் பெறுகின்றன. அன்றியும், எத்துணை முறை எடுத்தோதியும் "தொடரும்" என்று பின் குறித்து தாம் எழுதும் கட்டுரையை முடிக்காமலே பல அன்பர்கள் அனுப்பிவிடுகிறார்கள். இச் செயல் வருந்தத் தக்கதேயாகும். சிந்தை பொருளியுள்ள நிருபங்களையும் கேயர்கள் எழுதியனுப்புவது ஏனோ அறிகிலேம். இத்தகைய உரைகள் நம்மால் ஒதுக்கியே தள்ளப்படுகின்றன.

கப்பற் செய்தி.

எல்லங்கா என்னும் கப்பல் இன்று சென்னை வந்து நாளை அதாவது தை மாதம் ௩௦-உ சிங்கப்பூர் புறப்படும். மாசி மாதம் ௪-உ ஞாயிற்றுக்கிழமை நாகையிலிருந்து புறப்படும்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல வட்டம் | ௦—௧—௦ |
| இரங்கூன் உண்டியல்வட்டம் | ௧—௮—௦ |

உபந்யாசம்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி கும்பகோணம் ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரிய ஸ்வாமிகள் ஸந்நிதியில், இன்று இரவு ௭-மணிக்கு மேல், மன்னார்குடி பிரம்மஸ்ரீ எக்ஞசாமி சாஸ்திரிகள் அவர்களால், "குருபக்தி" என்னும் அரிய விஷயம் உபந்யஸிக்கப் பெறுகிறது.

திருக்குறட் கழகம்.

இவ்வாரக் கூட்டத்திலும் "வாழ்க்கைத்துணை நலம்" என்னும் அதிகாரத்தின் ௫-வது குறள் ஒன்றே நடைபெற்றது. அங்கத்தினரும் அபிமானிகளுமாகப் பலர் விஜயம் செய்திருந்தனர்.

ஓர் விருந்து.

இவ்வூரில் இதுகாறும் வருமானவரிக் காரியாலத் தலைமை அதிகாரியாக இருந்த ஸ்ரீ கே. சி. வெங்கட்டராமய்யரவர்கள் சென்னைக்கு மாற்றப் பெற்றிருப்பதின் நிமித்தம் அவர்கட்கு இவ்வூர் வருமான வரிக் காரியஸ்தர் சுப்பிரமணிய அய்யர் அவர்கள் நாளிது ௧—உ—உ௫ மாலை ௫-மணிக்குச் செஞ்சையில் ஓர் விருந்து அளித்தார்கள். அவர்களது புகைப்படமும் ஒன்று எடுக்கப்பட்டது. பிரபல கனவான்கள் விஜயம் செய்திருந்தனர்.

இன்று அரியக்குடியில் எஸ். சுந்தரமய்யங்கார் அவர்களால் ஓர் விருந்து அளிக்கப் பெறும் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்வாமிகள்.

இப்பெரியார் இன்னும் சில நாட்கள் தங்கியிருப்பார்களென்று தெரிகிறது. ஸ்வாமிகள் தமது பரிவாரங்களுடன் ஸ்ரீ மீனாக்ஷி வித்தியாசாலை சென்று கலாசாலையைப் பார்வையிட்டு மாணவர்கள் ஆசிரியர்கள் அத்யக்ஷர்களையும் ஆசிர்வதித்தார்கள். அங்கு மாணவர்களால் தமக்குப் பாதகாணிக்கையாக அளிக்கப்பெற்ற ரூபா இருநூற்றுடன் தமது மடத்திலிருந்து ௫௦-ரூபாயும் சேர்த்துக்கொடுத்து, வித்யாசாலையில் மதப்படிப்புப் பயிற்சிக்காக வைத்துக் கொள்ளும்படி சொன்னார்கள். ஸ்வாமிகள் ஸந்நிதானத்தில் நேற்று இரவு ௮-மணிக்கு மேல் சித்தூர் ஸமஸ்கிருதக் கல்லூரியின் தலைமையாசிரியர் "சாஸ்த்ரரத்னாகரம்" "வேதாந்த பூஷணம்" பிரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் "சிவாத்வைதம்" என்னும் பொருள்பற்றி யுபந்யாஸம் செய்தார்கள்

— ஒருநிருபர்.

## பிராம்மண சமாராதனைகள்.

நம் நாட்டில் பிரம்ம க்ஷத்ரிய வைசிய சூத்ரர் என்னும் பாகுபாட்டில் நம்பிக்கையிருந்து வருகிறது. நான்கு வர்ணப் பிரிவில் தனக்கு நம்பிக்கையுண்டென்று மகாத்மா காந்தி யவர்கள் நேற்று வந்த "யங் இண்டியா" வில் எழுதியிருக்கிறார்கள்.

இன்னொரு நம்பிக்கையும் இந் நாட்டில அற்றுப் போகவில்லை. அதாவது, தேவதைகளை ஆராதிக்கப்பிராமண சமாராதனை ஒரு விசேஷமான மார்க்கம் என்பது.

தேவதா ராதனையை யுத்தேசித்துச் செய்யும் பிராம்மண சந்தர்ப்பணைக்கும் அன்னதானத்திற்கும் கொஞ்சம் வித்தியாசமுண்டு. ஒன்றின் நோக்கம் தேவதையின் திருப்தியும் அநுக்கிரகமும், மற்றொன்றின் நோக்கம், வருந்தும் வயிற்றுக்கு அன்னமிடுதலுமாம். இரண்டாவது கடமையை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கிருகஸ்தனும், தான் புசிக்கப் போகாலத்தி லெல்லாம் செலுத்த வேண்டியவன். முதலிற் சொல்லியசந்தர்ப்பணை விசேஷ காலங்களில் தனிகர்களுக்குமட்டும் உரியது.

உதாரணமாக, நமது ஊருக்குக் காமகோடி பீடாதிபரான ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியார் வந்திருக்கிறார்கள். அவர்களுக்குப் பல தனவைசிய கனவான்கள் பிக்ஷை செய்து வருகிறார்கள். இந்தப் பிக்ஷைக்கு முக்கியமான அங்கம் ஸ்ரீ திரிபுரசுந்தரி சந்திர மௌளியின் ஆராதனையாகும். இந்த ஆராதனைக்கு பிராம்மண சந்தர்ப்பணையானது இன்றியமையாத அம்சமாகிறது. கனவான்கள் பிக்ஷை செய்வித்தாலும் சரி, மடத்தின் செலவிலேயே பிக்ஷை நிகழ்ந்தாலும்சரி, கும்பகோணத்திலும்சரி, ஸஞ்சாரமாகும் ஊர்களிலும்சரி, ஸ்ரீ சந்திர மௌளியின் ஆராதனையின்பொருட்டுப் பிராம்மண சமாராதனைகள் நடந்தேறியே வருகின்றன.

பிராம்மணசமாராதனைகளை விலக்கிப் பிக்ஷை யளித்தால், ஸ்ரீ சங்கராசாரியாருக்கு அதிக திருப்தியுண்டாகுமென்று சிலர் கருதுவது மிகவும் பிசகான எண்ணம். பிராம்மணசந்தர்ப்பணையையும் அன்னதானத்தையும்ஒன்றென்றெண்ணுவது இரண்டின் நோக்கங்களையும் அறியாமையைக்காட்டுகிறது என்று நிகரிகாமணிகள் சாஸ்திரங்களின் கருத்தையறிந்தொழுகுவார்களாக என்று, என். எஸ். வெங்கடராமய்யர் எழுதுகிறார்.

## பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம்.

சென்ற நிர்வாகக் கூட்டத்தில் ஸ்ரீமாந் ராம. மெ. சித. அருணாசலச் செட்டியாரவர்கள் தமது காரியதரிசி பதவியை ராஜிநாமா செய்தார்கள். அதைச்சிறிது ஆலோசனைக்குப் பிறகு ஒத்துக்கொண்டு, சங்கத்தலைவரவர்கள் பின்வருமாறு வந்தனமளித்தார்கள்.

நிர்வாக சபையோர்களே!

நமது சங்கக் காரியதரிசி திருவாளர் ராம. மெ. சித. அருணாசலச் செட்டியாரவர்கள் தக்க காரணங் கூறித் தமது பதவியை ராஜிநாமா செய்துள்ளார்கள். அவர்கள் சங்கத்திற்குச் செய்துவந்த அரிய தொண்டைக் கண்ணுற்ற நாம் ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ள இயலவில்லையெனினும், அவர்கள் தாய்நாட்டிற்குச் சென்று பந்து ஜன மித்திரர்களுடன் கலந்து சந்துஷ்டியாய் இருந்துவரவேண்டுவது நமது கோரிக்கையாதலால், அவர்களுடைய ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ள வேண்டியதாகவே யாயிற்று.

கனவான்களே! திருவாளர் ராம.மெ. சித. அருணாசலச் செட்டியாரவர்கள் நமது சங்கம் ஒரு வருடக் குழந்தையாயிருக்கும்பொழுது, காரியதரிசியாக வமர்ந்து தொண்டியற்றிய காலத்தில் இப்பர்மாவில் இதுவரை பார்த்திராத நம்மவர்களின் ஒரு பெரிய மகாநாடு கூடியது குறிப்பிடத் தக்கதாகும். நமது சங்கத்தைப் போஷிக்கக் கூடிய அநேக உயரிய தீர்மானங்கள் நிறைவேறியதும், அதைஅமுலுக்குக்கொண்டுவர முயற்சித்ததும், கப்பல்களில் நமக்கு வெகுநாளாக மிகுந்த அசௌகரியங்கள் ஏற்பட்டிருந்ததை நிவர்த்திக்க வழி தேடியதும் இக்காலத்தில் தான் என்பதை ஞாபகமூட்டுகிறேன்.

இத்தகைய சமூக அபிமானமுள்ள திருவாளர் அருணாசலச் செட்டியார் அவர்கட்கு நமது சங்கத்தின் மனப்பூர்ணமான வந்தனத்தைத் தங்கள் சார்பாகத்தெரிவித்துக்கொள்ளுகின்றேன். அவர்கள் நீடூழி வாழ்ந்து நமது சங்கத்திற்குஞ்சமூகத்திற்கும் இன்னும் அரிய தொண்டியற்ற எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக. சுபம்!

## ஸ்தல ஸ்தாபனம்.

ராவ்பகதூர் ஸ்ரீமாந் ஆவி. பழ.சிதம்பரம் செட்டியாரவர்கள் பின்வருமாறு நமக்கு அறிவிக்கிறார்கள்:—

காரைக்குடி ஸ்தல ஸ்தாபன வாக்காளர்களைக் கூட்டக்கூடிய முதல் எலெக்டோரல்ரோல் நாளிது ௧௯௨௫௵ பிப்ரவரிமீ ௧௮௳ வரை தினசரி காலை ௧௧-மணி முதல் மாலை ௪-மணி வரை பொது ஜனங்களின் பார்வைக்கு ஸ்தல ஸ்தாபனக் காரியாலயத்தில் கொடுக்கப்படும். யாதொரு நபர் இந்த ஜாபிதாவில் சேர்க்கப்படாமலிருந்து தம்மை இந்த ஜாபிதாவில சேர்க்கப்பட வேண்டுமென்று சுதந்தரித்துக் கேட்பதாயிருந்தாலும், அல்லது சரியல்லாத இடத்திலேயோ அல்லது சரியல்லாத விபரங்களுடனேயோ தாக்கல் செய்யப்பட்டிருந்தாலும், அவர் தம்முடைய பெயரைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றாவது அல்லது தம்முடைய பெயருக்குரிய பதிவுகளைத் திருத்தல் செய்துகொள்ள வேண்டுமென்றாவது தலைவரவர்களை எழுத்துமூலம் கேட்டுக்கொள்ளலாம்.

யாதொரு நபர் தம்முடைய பெயர் இந்த ஜாபிதாவில் சேர்க்கப்பட்டிருந்து, அதற்குரிய பதிவுகளைச் சரியல்லவென்று ஆக்ஷேபிப்பதாகவிருந்தாலும், அல்லது இந்த ஜாபிதாவில் சேர்க்கப் பட்டிருக்கும் மற்ற யாதொரு நபரின் பெயராவது இதில் சேர்க்கப்படக் கூடாதென்றாவது ஆக்ஷேபிப்பதாகவிருந்தாலும், தலைவரவர்களிடம் எழுத்து மூலம் ஆக்ஷேபனைசெய்துகொள்ளலாம்.

மேல்கண்ட விண்ணப்பங்களும் ஆக்ஷேபனைகளும், காரியாலய நேரங்களில் எப்பொழுதாகிலும், தலைவரவர்களிடம் நேரிலாவது தபால் மூலமாவது சேர்ப்பிக்கப்படலாம். ஆனால் நாளது பிப்ரவரிமீ ௧௮௳க்குள் அவைகள் தலைவர்களிடம் வந்து சேரும்படி அனுப்பித்துக் கொள்ளப்பட வேண்டும்.

குறிப்பிட்ட நமூனாக்களிலாவது, அல்லது குறிப்பிடப்பட்ட காலத்திற்குள்ளாகவாவது வந்து சேராத விண்ணப்பங்களும் ஆக்ஷேபனைகளும் தள்ளுபடி செய்து விடப்படும்.

குறிப்பு:—குறிப்பிட்ட விண்ணப்ப நமூனாக்களும் ஆக்ஷேபனை நமூனாக்களும் ஸ்தல ஸ்தாபனக் காரியாலயத்தில் விலையின்றிப் பெற்றுக் கொள்ளலாம்.

## சிவநேசர் திருக்கூட்டம்.

இத்திருக் கூட்டத்தார் நிகழும் தை-மீ ௨௪௳ குன்றக்குடிக்குச் சென்று மயிலாடுபாறை வெ. ராம. வெ. வெ. மடத்தில் தங்கியிருந்து, ஆலய வழிபாடு செய்து கொண்டார்கள். ௨௫௳ காலை அன்னதானமடத்து மண்டபத்தில், சைவப் பிரசங்கங்களியற்றிப் பிரதோட நாளாகிய அன்று ஆலய வழிபாடும் செய்துகொண்டார்கள். ௨௬௳ காலை, மாலை இரண்டு நேரங்களிலும் கண்டனூர் மு.நா. மேலைப் பாடசாலையில் சிவநேசச் செல்வர் மணிவாசக சரணாலய சுவாமி அவர்கள் தலைமையில் சைவப் பிரசங்கங்கள் இயற்றிக் கன்னிய ரிருவர் நீங்காக் கருணை வாரிதியாகிய பன்னிரு புயத்திறைப் பதமலர் போற்றிப் பணிந்தார்கள். அன்பர்கள் தேவாராதி அருட்பாக்களை பண்ணமைதியுடன் அருளிப் பாடினார்கள். எல்லாம் வல்ல இறை சிவன் திருவருளால் யாவும் நன்மையாகவே நிறைவேறின.

இத்திருக் கூட்டத்தார் மாசித் திங்கள் ௨௪, ௨௫ம்-நாள் சனி ஞாயிறு கிழமைகளில் கண்டரமாணிக்கத்திற் கூடி உரிய சிவத்தொண்டு புரிவார்கள் என்று திருக்கூட்ட ஊழியன் இராமசாமி எழுதுகிறார்.

## தந்திச் செய்தி.

பினங்கு தைமீ ௨௮௳

சென்னை உண்டியல்விலை நூற்று ஐம்பத்தைந்து

ஈயம் விலை நூற்று முப்பத்திரண்டு

ரப்பர் விலை எண்பத்திரண்டு

இரங்கூன் தைமீ ௨௮௳

| | |
|---|---|
| படகுநெல் | ௧௭௭—0—0 |
| புகையிரத நெல் | ௧௭0—0—0 |
| இயந்திர அரிசி பெரிது | ௪௩0—0—0 |
| ஷை சிறிது | ௪௫0—0—0 |
| தீட்டற் புழுங்கலரிசி | ௫௨0—0—0 |
| நசேன் புழுங்கலரிசி | ௪௭௫—0—0 |
| எ ஒன் குருணை | ௪௪0—0—0 |
| பி ஒன் குருணை | ௪௨௫—0—0 |
| உழுந்து | ௩௮0—0—0 |
| தட்டைப்பயறு | ௪௮௫—0—0 |
| வெள்ளைத் தட்டைப்பயறு | ௩௧0—0—0 |
| பாசிப்பயறு | ௩௮0—0—0 |
| முத்துச்சோளம் | ௩௮0—0—0 |
| பருத்திவிதை | ௧0—௬—0 |
| திப்பிலி | ௪௮0—0—0 |
| ஏலம் | ௩௧0—0—0 |
| காசுக்கட்டி | ௧௩0—0—0 |
| தங்கம் | ௩௩—௪—0 |
| பவுன் | ௧௪—0—0 |
| வெள்ளி | ௭௬—0—0 |
| டாலர் | ௬0—0—0 |
| தவணைவட்டி | 0—௧௪—௬ |

பணம் பிரியம்.

சென்னை தை-மீ ௨௮௳

| | | | | |
|---|---|---|---|---|
| பவுன் விலை | ரூ, | ௧௩ | ௧௫ | 0 |
| வெள்ளி விலை | ரூ. | 0 | ௧௨ | ௩ |

## சண்முகநாதபுரம் சரஸ்வதி வாசகசாலை.

நாளிது தை மாதம் ௨௭௳யில் ஸ்ரீமாந் கே. எஸ். வெங்கிட்டராமய்யரவர்கள் தலைமையின் கீழ் திருவாளர் சுப. ஆறுமுகச் செட்டியாரவர்கள் புலால் மறுத்தல் என்னும் விஷயத்தைப்பற்றி மிக அழகாக விரிவுடன் சொற் பெருக்கிட்டதுடன் ஸ்ரீமாந் கே. எஸ். வெங்கிட்டராமய்யரவர்கள் உபந்யாசம் செய்ய பயில்வதவசியம் என்பதைப்பற்றி மிக ஊக்கத்துடன் பேசிக் கடவுள் வணக்கத்துடன் சபையும் மாலை ௬-மணிக்கு இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி சித. பெத்தபெருமாள் எழுதுகிறார்.

## விளம்பரம்.

என்னுடைய வி. ஆனந்தா கம்பெனியில் வேலை பார்த்துவந்த எஸ். சத்தியமூர்த்தி அய்யரென்பவரை ௯—௨—௨௫௳யில் நான் வேலையைவிட்டு விலக்கிவிட்டபடியால், ஷையாரிடம் எங்கள் கம்பேனி சம்பந்தமான யாதொரு நடவடிக்கைகளும் எங்களைக் கட்டுப்படுத்த மாட்டாது என்று இதன் மூலம் தெரிவிக்கலாயிற்று.

சித. குமா. சிதம்பரஞ்செட்டியார்.



## உண்மைக் கூற்றுகள்.

வீரன் எழுதியன:—

சிலகாலமாச் அஞ்சா நெஞ்சனும், சுத்தவீரனும் வந்து கொட்டியளந்து கொண்டிருக்கிறார்களே, இப்பொழுது துணைக்கு வீரன் தோன்றியிருக்கிறான் போலும் என்று சிலர்க்கு மகிழ்ச்சியும் சிலர்க்குக் கோபமும் பிறக்கும். மகிழ்ச்சி கொள்பவர் மகிழ்க. கோபங்கொள்பவர் கொள்க. உள்ளதைச்சொன்னால் கொள்ளைக்கண்ணனுக்குக்கோபம். அதற்காக நாங்கள் பயப்படமுடியுமா? வீரம் என்பது எது? வீரமென்றவுடனே சிலருக்குக் கோபம், கொதிப்பு வன்மம் முதலியன கிளம்பக் காண்கிறோம். வீரம், கோபமா? கொதிப்பா? வன்மமா? இன்னோரன்ன பிறவா? வீரம்; கோபத்தில் பிறப்பதா? பிறவற்றில் பிறப்பதா? கோபமும் கொதிப்பும் பிறவும் எவரிடத்தில் உதிப்பன? உடலில் போதியவல்லமை யில்லாதாரிடத்தில் உதிப்பன? உடலாற்றலிழந்திட்போமாயின் வீரமெவ்வாறுஎழும்? கோபம் முதலியன நரம்பு மெலிவுற்றோர்பால் நிகழ்வதென அறிஞர் பலரும் ஒப்பமுடிந்த உண்மை. உடல் நலமில்லா ஒருவன் அடிக்கடி சினமெனும் பேய்க்கு இரையாதல் இயல்பு. "சினமுடையானைப் பலமுடையானென்று எப்படிச்சொல்வது? அவனை வீரனென்று எங்ஙனம் அழைப்பது?" என்று "நவசக்தி" யின் சிலம்பு ஒலிக்கக் கேட்டிலீரோ? வீராகிய எம்பாற் கோபங் கொள்ளுதல் வேண்டாம். நீங்களும் இன்னும்உடல்வலியற்றோராக— சினமுடையோராக விருக்காது, வீராராகுங்கள்; அதற்கே யாமும் முயல்வது.

### ஆடவர்க்குமா?

பெண்கள்தாம் நகைப் பைத்தியம் பிடித்துத் திரிகிறார்களென்றால், ஆடவரிற் சிலரையும் அப்பேய் பிடித்தாட்டுகிறது. வீட்டிலுள்ள நகைகளையெல்லாம் அழிப்பதும், வேறு நகைகள் புதிதாகச் செய்வதும், அலங்கரித்துப்பார்ப்பதும், கழற்றுவதும் இருப்புப் பெட்டியில் வைப்பதும், பூட்டுவதும், எடுத்தெடுத்துப் பார்ப்பதும் ஆகிய இத்தொழிலை ஆடவரிற் சிலர் கைக்கொண்டிருக்கின்றனர். சதா சர்வகாலமும் அவர்கள் தட்டான் வீட்டிலே யிருக்கிறார்களென்று கூறுவது மிகையாகாது. பெண்கள்போல, சீவிச்சினுக்கெடுத்துச் சிங்காரப் பொட்டிட்டு, நகைகளை வாரிப் போட்டுக்கொண்டு அலைந்து திரிய அவர்கட்கு நேரம் சரியாய்ப்போகிறது. வயிரக்காரனுக்கும் தட்டானுக்கும் ஏனையா இப்படிப் பணத்தை யநாவசியமாகக் கொட்டிக்கவிழ்க்கிறீர்கள்? என்று கேட்டால், "போங்கிறேன்! அங்கிட்டு! ஆசையுள்ளபோது போட்டுக்கொள்ளாது பின்னாடி என்னத்துக்கு?" என்கிறார். ஆடவர்க்கு இது அழகாகுமோ? இதிலென்ன ஆசை? இதிலென்ன இருக்கிறது? இப்படியே நாம் காலங்கடத்தினால் பிறவிப்பயனை யடைவதெப்படி? அன்பு வீரத்தாலல்லவோ அதை நாம் அடையவேண்டும். அவ்வீரர்க்கு அணியிதுவோ? அவர்க்கு ஆரங்கண்டிகையாம்; ஆடை கந்தையாம்; இதுமிக எளிய இன்பவாழ்வைக் குறிப்பிடுகிறது. பொன்னணியும் பட்டாடையும் வீர உடைகளல்ல! அவைகள் அச்சத்தையல்லவோ ஊட்டிக் கொண்டிருக்கும்! எளிய வாழ்விலுள்ள இன்பம் செல்வ வாழ்விலில்லை யென்பது நிச்சயம். எளிய வாழ்வை விரும்பும் ஒருவன் வீரமே வீரம்; எளியவன் உள்ளம் பொன்னணிமீதும் பட்டாடைமீதும் படிந்து ஆசையென்னும் அரக்கனைப் படைக்கும்போது, அவ்வரக்கனை அறிவாம் வாள் கொண்டு சேதிக்கும் வீரம் அவன்பால் எழுகிறது. அவ்வரக்கனைக் கொல்லும் ஆற்றலில்லா ஒருவனை எப்படி வீரனென்றழைப்பது? வீரர்களுக்குப் பாரம் ஈசன் பணியன்றிப் பிறிதில்லையாம். ஈசன்பணி என்பது எது? ஈசன் என்றும் உறையும் உயிர்களை வழிபடுவதாகும். உயிர்களை வழிபடப் புகுகிறவன் தன்னலத்தை யறுத்த வீரனல்லனோ? உலகில் ஒருவனுக்குப் பெரும்பகையாய் இடர் செய்வது தன்னலமேயாகும்; தன்னலமுடையவன் பிறர் நலங்கருதி யுழைக்க மாட்டான். தன்னலத்தை யறுப்பது எளிதோ? அதையறுப்பதன்றோ வீரம்! உள்ளத்தெழும் ஆசையாம் பேயைக் கொல்லத்தக்க வீரர்களைக் காண்டல் அரிது "தன்னலத்தைப்பலியிட்டு உயிர்களாம் ஈசனை வழிபடும் பாரமுடையாரே வீரர்" என்று "நவசக்தி" யின் சிலம்பு ஒலிக்கின்றதாகலின் எழுங்கள்! இந்நகைப் பேயையும் இன்னோரன்ன பிறபேய்களையும் அடித்துத் துரத்திவிட்டு நம் சமூகம் இருக்கும் நிலையையுன்னுங்கள்; பணிசெய எழுங்கள்; தொண்டாற்றுவார்க் கூட்டத்தைக் கூட்டுங்கள்; தீர்மானங்கள் செய்து வழுவாமற் காக்க முயலுங்கள்; அதுவே உங்கள் பிறவிப்பயன்.

### துணையில்லை.

நமது ஆசிரியர்களெல்லாரும் பெண்களின் அங்கங்களை அபாரமாக வருணித்து, அவர்கட்கு இடையே இல்லை என்றும் நுண்ணிடை என்றும் நூலிடை என்றும் பொய்யிடை என்றும் கூறியிருக்கின்றனரே! ஏனையா? பெண்கட்குக் குந்தாணிமாதிரி இடையிருக்கிறபோது, இடையே இல்லையென்று "முழுப்பூசனிக்காயைச் சோற்றிலேயமுக்கும்" பெரும் பேர்வழிகளாக இருக்கிறார்களே என்று எனது நண்பர் பிள்ளையார் என்னைக்கேட்டார். அதற்கு நான் "ஆமய்யா மூன்காலத்திற் பெண்களெல்லாம் மிக நல்லவர்களாக — சாந்தமுடையோராக — நற்குணநற்செய்கை யுடையோராக-புத்திசாலிகளாக இருந்தமையின், அவர்கள் அங்கங்கள் மிக மெல்லியனவாகவும் அமகுள்ளனவாகவும் இருந்தன; மனிதரின் குணங்கட் கேற்பவே, அவர்கள் அங்க அமைப்புகளும் இருக்கும்" என்பதே உடல் நூலார் கூற்றும். இப்பொழுது பெண்களிடைச் சண்டையும் வம்பும் பிற தீய எண்ணங்களும் செய்கைகளும் மலிந்து அவர்கட் கியற்கையான மெல்லிய தன்மையும் பறந்துவிட்டமையின், அவர்கள் அங்கங்கள் நலம் பெற்றிருக்கவில்லை; அவர்கள் சமூகம் அழகுடையதாயில்லை; உடம்பினமைப்பு பொலிவுற்றிருக்கவில்லை; சாமுத்திரிகா லக்ஷணப்படியுள்ள பெண்களே இப்பொழுது அரிதாகஇருக்கின்றனர். அவர் கூந்தல் கருங்கிலென்பது போய்ச் செக்காவாகவும், முகம் செந்தாமரை என்பதுபோய், "யாளி"முகமாகவும், குமிழ் மூக்கென்பது போய்ச் சப்பட்டை மூக்காகவும், குமுதவாய் என்பதுபோய்க் கானவாயாகவும், நூலிடை என்பது போய்க் குந்தாணியிடையாகவும் இப்படியே பிற அங்கலன்களும்மாறிவிட்டன்வையா" என்றுபதிலிறுத்தேன்; "பதிலெப்படி?" இதுகொண்டுயான் பெண்ணுலகத்தையே பழிப்பதாகக் கோடல் தவறு; என்னை? அத்தகைய பலரையே அது குறிக்குமாகலின் என்க.

## நூல் சந்தா. (நமது மாறல்.)

ஜெனவரி மாதம்

திருவாளர்கள்

௧. அழ. ராம. சிதம்பரச்செட்டியார் சொக்கலிங்கம் புதூர்
௨. அழ. ராம. நாகப்ப செட்டியார் ,,
௩. மு. சொக்கலிங்கச் செட்டியார் வேந்தன்பட்டி.
௪. அழ. மு. முத்துக்கருப்பன் ,, செட்டியார், தேவகோட்டை
௫. பழ. முத்தையா செட்டியார் ,,
௬. அ. வெ. வெங்கடாசலச்செட்டியார்
௭. அ. வெ. தியாகராஜா ,,
௮. ஏ. என். அருணாசலச் செட்டியார் ,,
௯. அ. மு. அ. அண்ணாமலைச் செட்டியார், ஆத்தங்குடி
௧௦. ராம. சுப. பழனியப்ப செட்டியார் ,, ஆ. தெற்கூர்
௧௧. எஸ். எம். வி. ஆர். அழகப்ப செட்டியார், புதுப்பட்டி
௧௨. கா. ரா. சித. நாராயணன் செட்டியார், ஆ. முத்துப்பட்டணம்
௧௩. எஸ். கே. எம். எஸ். பி. காசிவிஸ்வநாதன் செட்டியார், செவ்வூர்
௧௪. பழ. சே. சொக்கலிங்கன் செட்டியார் ,,
௧௫. கே. எல். கே. பி. காசிவிஸ்வநாதன் செட்டியார் நெற்குப்பை
௧௬. கரு. கருப்பையா செட்டியார் கண்டரமாணிக்கம்
௧௭. ராய. சொக்கலிங்கன், காரைக்குடி
௧௮. ஷையார் மனைவி உமையாள் ,,

ஃப்பிரவரி மாதம்.

௧. உ. செ. உ. மு. பழனியப்ப செட்டியார், லெட்சுமிவரம்
௨. அ. வெ. தியாகராஜா தேவகோட்டை
௩. எஸ். முத்தையா பிள்ளை ,,
௪. பழ. முத்தையா செட்டியார் ,,
௫. வெ. அழ. அழகப்ப செட்டியார் ,,
௬. ஏ. என். அருணாசலச்செட்டியார் ,,
௭. அ. வெ. வெங்கடாசலச் செட்டியார்
௮. கரு. கருப்பையா செட்டியார் ,, கண்டரமாணிக்கம்
௯. ராய. சொக்கலிங்கன், காரைக்குடி
௧௦. ஷையார் மனைவி உமையாள் ,,
௧௧. மு. சொக்கலிங்கச் செட்டியார் வேந்தன்பட்டி
௧௨. நா. ஆ. கரு. காசிவிஸ்வநாதன் செட்டியார், செவ்வூர்
௧௩. அ. மு. அ. அண்ணாமலைச் செட்டியார், ஆத்தங்குடி
௧௪. பிச. சுப்பிரமணியச் செட்டியார் ஈப்போ
௧௫. அழ. ராம. நாகப்ப செட்டியார் சொக்கலிங்கம் புதூர்
௧௬. ராம. நாகப்ப செட்டியார் மனைவி வள்ளியம்மை ஆச்சி, சண்முகநாதபுரம்
௧௭. அழ. ராம. சிதம்பரச் செட்டியார் சொக்கலிங்கம்புதூர்

# மதிப்புரை.

### சிற்ப நூற் போக்கிஷம்.

இது, வீடுகள் முதலிய கட்டிடங்கள் அமைக்க வேண்டிய காலம் இடம் அமைப்பு முறை முதலிய விதிகளை நன்கு எடுத்து உரைக்கும் நூல். இது வரை வெளிவராத தொன்று. பற்பல விதிமுறைகளைத் திரட்டி, மதுரைத் தமிழாசிரியர் ஸ்ரீமான் சந்தணம்பிள்ளை யவர்களாலாக்கப் பெற்று, அவர் குமாரர் மதுரை சோதிட சாஸ்திரி ஸ்ரீமான் எஸ். கூடலிங்கம பிள்ளை யவர்களால் சுத்தப் பதிப்பாக அச்சிடப் பெற்றுள்ளது. இது கையிலிருப்பின் மாளிகை முதலிய பற்பல மனைகள் கட்டுதலில் யாதொரு குற்றமும் நேராதவாறு கவனித்துச் செயல் கூடும். இதன் பதிப்பாசிரியர் தமிழ் நாட்டிற் பிரஸித்தி பெற்றவராதலின், அவர்களால் வெளி வரும் இது பலர்க்கும் பயன் தருவதாகு மென்பதொருதலையே.

இதன் விலை ரூ. க—0—0.

* * *

### சோதிடப் போகராதி.

இவ்வரிய பெரிய நூலும், சோதிட சாஸ்திரி ஸ்ரீமான் எஸ். கூடலிங்கம் பிள்ளை யவர்களாலேயே ஆக்கப்பெற்று வெளியிடப் பெற்றிருக்கிறது. சோதிடத்துக்குரிய பற்பல சொற்களின் பொருள்கள் நன்கு விவரிக்கப்பட்டிருக்கின்றன. பஞ்சாங்கம் ஜாதகம் முதலிய கணிப்பவர்க்கும் ஜாதகப் பலன் சொலலும் தொழிலுடையார்க்கும், அவரவர்கட்குரிய நூல்களில் எளிதிற் புகுவதற்கொரு நற் கருவியாகு மாறுல, அவ்வத் தொழிலுடையார்க்கே யன்றிப் பிறர்க்கும் பயனளிப்பதொன்றாம் என்பது எமது அபிப்பிராயம்.

இதன் விலை ரூ. உ—௪—0.

இவ்விரண்டு புத்தகங்களும் "எஸ். கூடலிங்கம், புத்தகசாலை, மதுரை" என்னும் விலாசத்திற் பெறலாம்.

* * *

### தோத்திரத் திரட்டு.

இது, பல திரட்டுத் தோத்திரங்களடங்கிய அறுபத்துநான்கு பிரபந்தங்களடங்கிய புஸ்தகம். இதில் விநாயகர் முதல் எல்லா மூர்த்திகட்கு முரிய நாமாவளிகளும் தோத்திரங்களும் திருமுறை வசனங்களும் திருப்புகழ் திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி முதலிய செய்யுள்களும், நால்வர்புராண சாரம் திருவிட்சதுரங்கள் மகேச்வர பூஜை திருவாய்மொழி இலக்குமி சரஸ்வதி தோத்திரம் முதலிய பலவும் அடங்கியிருக்கின்றன. இதன் விலை ரூபா. க—0—0.

இது இரங்கூன் நகரத்தாரவர்களாற் பதிப்பிக்கப்பெற்றது. இது, "பல ஊர் குடி சிவநேசர் திருக்கூட்டக் காரியதரிசியிடமும், இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கத்திலும் இன்னும் வேறு இடங்களிலும் விலைக்குக் கிடைக்கும்.

* * *

### நலசங்கிரமாலை.

இது, நாராயண வள்ளுவராலியற்றப்பட்டு ஷேயார் குமாரர் வையாபுரிவள்ளுவரால் கொடுக்கப் பெற்ற பிரதிகினைக் மதுரை. ம. அழகாசாமிபிள்ளை யவர்களால் அச்சிடப் பட்டது. மறையார் பறையார் இவரது குலவிளக்கம் கூறுகின்றது. இதன் விலை அணா 0-உ-0 வேண்டுவோர் "கே. குமாரவேல் க0. சொக்கநாதன் தெரு மதுரை" எனும் விலாசத்திற் பெறலாம்.

---

## இனிய தமிழ்நாவல்கள்.

வடுவூர் துரைஸாமிஐயங்காரவர்கள் B. A. இயற்றியவை.

| | | | |
|---|---|---|---|
| விலாஸவதி (க, உ-பாகங்கள்) | ந | 0 | 0 |
| மதனகல்யாணி (க, உ, ந) | ச | அ | 0 |
| பூர்ணசந்திரோதயம் (க, உ, ந, ச) | எ | அ | 0 |
| காளிங்கராயன் கோட்டை ரகசியம் (க, உ) | ச | 0 | 0 |
| சௌந்தரகோகிலம் | க | அ | 0 |
| மேனகா (க, உ) | ந | 0 | 0 |
| கும்பகோணம்வக்கீல் (க, உ) | ந | 0 | 0 |
| பாலாமணி (க, உ) | உ | அ | 0 |
| வஸந்தமல்லிகா | க | அ | 0 |
| வித்யாசாகரர் | க | ச | 0 |
| திலோத்தமா | 0 | கஉ | 0 |
| மாணிக்கவாசகர் | 0 | அ | 0 |

தபாற்கூலி வேறு.

வ. உ. சிதம்பரம்பிள்ளை அவர்கள் இயற்றியவை.

| | | | |
|---|---|---|---|
| மனம்போலவாழ்வு | 0 | அ | 0 |
| மெய்யறம் | 0 | அ | 0 |
| வள்ளி சரித்திரம் | 0 | அ | 0 |

| | | | |
|---|---|---|---|
| திருக்குறள் (மணக்குடவருரை) அறத்துப்பால் | க | 0 | 0 |

சுதேசமித்திரன் புத்தகசாலை.

| | | | |
|---|---|---|---|
| பகவத்கீதை (தமிழ்மொழிபெயர்ப்பு) | ந | 0 | 0 |
| தீர்க்கதரிசிகள்சரித்திரம் (காலிகோபைண்டு) | உ | ச | 0 |

தீர்க்கதரிசிகள்சரித்திரம்.

| | | | |
|---|---|---|---|
| சங்கரர், இராமானுஜர், மத்வர், கௌதம புத்தர், குருநாநக், மகாவீரர், மகமத்நபி தனித்தனி | 0 | ரு | 0 |

### தேசீய ஞானத்தையும், தேசாபிமானத்தையும், புகட்டக்கூடிய உயர்ந்த தமிழ்நூல்கள்.

கிருஷ்ணசுவாமி சர்மா அவர்கள் எழுதியவை.

| | | | |
|---|---|---|---|
| மகாத்மாகாந்தி | க | அ | 0 |
| திலகர் | க | அ | 0 |
| நெபோலியன் | க | அ | 0 |
| அலிசகோதரர்கள் | க | அ | 0 |
| இந்தியாஇழந்தனம் | க | 0 | 0 |
| இராஜநீதிசாஸ்திரம் | க | 0 | 0 |
| ஆன்மசக்தி | 0 | க0 | 0 |
| ராஜராஜசோழன் | 0 | க0 | 0 |
| அசோகன் | 0 | அ | 0 |
| கும்பமகாராஜா | 0 | கூ | 0 |
| டால்ஸ்டாய் | 0 | ச | 0 |
| நேரு | 0 | உ | 0 |
| சிவாஜி | க | 0 | 0 |

பாலர்கட்கு அவசியத் தேவையாக உள்ளவை.

| | | | |
|---|---|---|---|
| பாலபோதினி | 0 | உ | 0 |
| முதல்பாலபாடம் | 0 | ந | 0 |

ஸி. சுப்பிரமணிய பாரதியாரவர்கள் இயற்றியவை.

| | | | |
|---|---|---|---|
| முதற்பாகம் | க | 0 | 0 |
| இரண்டாம்பாகம் | க | 0 | 0 |
| மூன்றாம்பாகம் | 0 | க0 | 0 |
| நான்காம்பாகம் | 0 | அ | 0 |
| ஐந்தாம்பாகம் | 0 | கஉ | 0 |

வள்ளுவர் நிலயம், காரைக்குடி.

---

## காந்தி பிள்ளைத்தமிழ்.

ஆக்கியோன் ராய. சொக்கலிங்கன்.

வழுவழுத்த அழகிய காகிதத்தில் (ஆர்ட் பேப்பர்) அட்டை போட்டது விலை ரூபாய் 0—க0—0

அழகாக எழுத்துக்கள் பதிக்கப்பெற்ற துணிக் கட்டிடம் (காலிகோ பைண்ட்) க—0—0

வேண்டுவோர் முந்துங்கள். பிரதிகள் சொற்பமே.

கடிதம் எழுதும் அன்பர்கள் எந்தப் புத்தகம் வேண்டும் என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறோம்.

வள்ளுவர் நிலயம்.

காரைக்குடி.



## பல தலைமுறையாய் பிரபல பிரசித்தியடைந்த வீ. ஸாமி அய்யங்காருடைய அரைக்கீரை விதைத்தைலம்.

இதன் குணம்.

பித்தமேக நீரானது சிரசுக்கேறி, அதனுல கண்மறைப்பு, கண்ணெரிச்சல், கண்புகைச்சல், கண்ணிலிருந்து நீர்வடிதல், ஒருதலைவலி, இருதலைவலி, பீனசம், காதினுல் சீழ்வடிதல், காது இரைச்சல், காதுவலி, ஐந்து வருஷத்திற் குட்பட்டதாயும் இரைச்சலோடுங் கூடிய காதடைப்பு, கரப்பான், தேமல், சிரசில் மயிர் உதிர்தல், சொண்டுவிழுதல் முதலான ரோகங்களை நிவர்த்திப்பதுமன்றி மயிரை நன்றாய் வளர்ச்செய்யும். இந்த நோட்டீசில் காணப்படாத கழுத்திறகு மேற்பட்ட சகல வியாதிகளையும் நீக்கி அனுகூலப்படுத்தும். மேற்கண்ட வியாதியில்லாதவர்கள் தேய்த்து ஸ்னானம்பண்ணினுல் தேகத்திற்குக் குளிர்ச்சியையும் ஆரோக்கியத்தையுங் கொடுக்கும். வாரத்திற்கு இரண்டுதடவை காலை அ-மணிக்குள் வெந்நீரில் சீயக்காய்தேய்த்து ஸ்நானஞ் செய்து யாதொரு பத்தியமுமின்றி உடனே போஜனஞ் செய்துகொள்ள வேண்டும். அ-நாள் வரையிலும் சுகந்தம் மாறாது. அன்று பகலில் மாத்திரம் தூங்க கூடாது. க0 பலங் கொண்ட புட்டி க-க்கு கிரயம் ரூபா க—க0—0.

பாக்கிங் போஸ்டேஜ் பிரத்தியேகம். வெளிநாடுகளுக்கு வி. பி. இல்லாததால் முன்பணம் அனுப்பவேண்டும்.

வி. எஸ்.. கோமளத்தம்மாள்,
மானுபாக்சரர்,
அ. பிராடீஸ் ரஸ்தா, மைலாப்பூர்,
சென்னப்பட்டணம்.

---

உ

### ஸ்ரீ மீனாக்ஷி தர்ம ஊமைப் பிள்ளைகள் பள்ளிக்கூடம். மதுரை.

மதுரை மேல மாசி வீதி கல்லரைச் சந்து உரு-நம்பர் வீட்டில் ஊமைப்பிள்ளைகளைப் பேசுவித்து படிக்கவும் கணக்குச்செய்யும படியும் செய்வதுடன் ஏழை மாணவர்களுக்கு அன்னவஸ்திரமும் உறைவிடமும் தர்மத்திற்காகக் கொடுத்து நடத்தி வைக்கும் பள்ளிக்கூடம். ககூஉ0ஹு முதல் நடைபெற்று வருகிறது. ஊமைப்பிள்ளை களுடைய பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை அவ்விடம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். கைத்தொழில் களும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. வேண்டிய விபரத்திற்கு ஷை பள்ளிக்கூடம் மானேஜர் சர்மிஷ்டம்மாளுக்கும் எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

---

### ஆங்கிலம் கற்க ஒரு அனுகூலம்.

தேசச் செய்திகள் யாவும் நிறைந்து தேசாபிமானத்தைப் புகட்டிவரும் தேசீய வாரப் பத்திரிகையாகிய

## "சுகோதயம்"

ஆங்கிலம் கற்க ஒரு அனுகூலம் செய்கிறது. பிரதிவாரமும் 'இங்கிலீஷ்-தமிழ் ஸ்வபோதினி' என்ற ஒரு பகுதியில் தமிழ் உச்சரிப்புடன இங்கிலீஷ்வாக்கியங்களுக்குத்தமிழில்அர்த்தம்கொடுக்கப்பட்டு வருகிறது. சிறு கதைகள் ரூபமாய் ஆங்கிலம் கற்பிக்கப்படுகிறது. வியாபாரிகளுக்கும் மாணவர்களுக்கும்ஆரம்பப்பள்ளி உபாத்தியாயர்களுக்கும் வெகு அனுகூலமானது. ஆங்கிலம் கற்பதுடன் தேசச் செய்திகளையும் அறியலாம்.

வருடசந்தா.

உள்நாடு ரூ உ-இ. வெளிநாடு ரூ ச. வி.பி. இல்லை. மணியார்டர் அனுப்பிப் பத்திரிகைபெறலாம்.

விலாசம்:—
மானேஜர், "சுகோதயம்"
ஆரணி. (வடாற்காடு)

---

### வெள்ளைக் கல்சாமான்.

படி, பட்டியல், அ-பட்டை நாகபந்தக்கால், ச-பட்டை பொட்டிப்புக்கால், கஉ-பட்டைக் கால்கள், ரவுண்டுகால், சோடிக் கால்கள் மற்றப்படி எந்த தினுசில் வேண்டுமென்றாலும் அடியில்கண்ட விலாசத்துக்கு எழுதினுல் கூடிய சீக்கிரத்தில் அனுப்பத் தயாராயிருக்கிறோம்.

அள. பெரி. பெரியண்ணன் செட்டியார்
ராயவரம், புதுக்கோட்டை சமஸ்தானம்.

### தபால் தந்தி மித்திரன்.

மூன்றாம் பதிப்பு வெளியாகிவிட்டது.

முந்திய பதிப்புக்களைக் காட்டிலும் இதில் இருபது பக்கங்கள்வரை அதிகமாகச் சேர்ந்திருக்கிறது. எளிதிற் றெரிந்துகொள்ளக்கூடிய எத்தனையோ அருமையான விஷயங்களெல்லாம் தொகுக்கப்பெற்றிருக்கின்றன. வர்த்தகர்களுக்கும் ஏனையோர்களுக்கும் இப்புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. உடனே எழுதுங்கள் வி. பி. மூலமும் அனுப்பப்பெறும்.

புத்தகம் க-க்கு விலை ரூ. உ.
தபாற்செலவு பிரத்தியேகம்.

மானேஜர், அழகேசன் அரிசி ஆலை
மணியுவா அப்பர் பர்மா.

---

### தனவைசிய ஊழியன் சந்தா விபரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உள்நாட்டிற்கு வருஷ சந்தா | ரூ. | ரு | 0 | 0 |
| வெளி நாட்டிற்கு ஷை | | சு | 0 | 0 |
| தனிப்பிரதி க-க்கு | | 0 | உ | 0 |

### விளம்பரம்.

| | | |
|---|---|---|
| மாதம் க-க்கு பத்தி க-க்கு | ரூ | உ0 |
| ஷை பத்தி அரைக்கு | ரூ | கக |
| ஷை கால் பத்திக்கு | ரூ | சு |
| ஷை அங்குலம்க-க்கு | ரூ | உ |

| | | |
|---|---|---|
| ஒருபக்கம் விளம்பரம் செய்ய ஒரு மாதத்திற்கு | ரூ | ருு0 |
| ஷை ஒரு வாரத்திற்கு | ரூ | கரு |

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோருக்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. கஎ- ஆகவும், அரைப்பத்திக்கு ரூ. கூ-ஆகவும், கால்பத்திக்கு ரூ. ரு-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதிற்கதிகமாகவும் விளம்பரம் செய்வோருக்கு மாதம் ஒன்றுக்கு பத்தி க-க்கு ரூ. கரு-வீதமும், அரைப்பத்திக்கு ரூ. அ-வீதமும், கால் பத்திக்கு ரூ. ச-வீதமும் போடப்படும்.

காரியஸ்தர், "தனவைசிய ஊழியன்" காரைக்குடி.

---

## கதர்! குறைந்தவிலை கதர்!!

எங்களிடம் சுத்தமான கதர் நூலினுல் தயாரித்த திருப்பூர், ராஜபாளையம், சிதம்பரம், எல்லூர் முதலிய ஊர்களிலிருந்து ஏராளமான கதர் தினுசுகள் வந்திருக்கிறது. விலை மிகச் சல்லிசாய் விற்கப்பட்டு வருகிறது.

கல்யாண காலங்கட்கு வேண்டிய வாசனைப்பாக்கு, கொப்பரைச் சீவல், கும்பகோணம் ஊறுகாய், குல்கந்து இன்னும் வேண்டிய சாமான்களும் சந்தனாதி தைலம், அரைக்கீரைத் தைலம், செண்டுகள், சோப்புகள், அரகஜா, புனுகு, ஜவ்வாது, ஊதுவத்தி வகையறாக்களும் கிடைக்கும். இன்னும் வேண்டிய ஸ்டேஷனரி சாமான்களும் கிடைக்கும். வியாபாரிகளுக்கு விலை நிரம்பச் சல்லிசாய்க் கொடுக்கப்படும்.

அயலூர் ஆர்டர்கள் உடனே கவனிக்கப்படும்.

மூ. அரு. இளையபெருமாள் செட்டியார்,
கொப்புடையநாயகி கதர் ஸ்டோர், காரைக்குடி.

ஙா. சொக்கலிங்கனும் காரைக்குடி தனவைசியஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப்பிரசுரஞ் செய்யப்பெற்றது

